

சங்கு கோலம்

27 - 14 புள்ளி (இடைப் புள்ளி)

பா. சுந்தரி



புருடென்ஷியல் கோப்பை கோலம்

15 - 8 இடைப் புள்ளி

D.R. ஸ்ரீமதி நடராஜன்

மங்கையர் மலர்

ஆகஸ்டு 1983



சந்தா விவரம்

தனிப்பிரதி ரூ. 1-50

ஆண்டுச் சந்தா ரூ. 18/-

ஆறு மாத சந்தா ரூ. 9/-

Edited, Printed and Published by V. Muralı on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras 600032 (Phone 431543)

Assistant Editor Manjula Ramesh



மஞ்சுளா ரமேஷ்

கல்வித்தரம் உயர்ந்து விட்டது என்கிறார்களே, கல்வி கற்பித்த பாடம் ஆண்களுக்கு இதுதானா?

இப்படிக் குமுறும் உள்ளம் சமீபத்தில் நடந்து முடித்த வழக்கின் விவகாரங்களைப் பத்திரிகைகளில் படித்தபோது வெடித்தே விட்டது!

இருபத்தியொரு வயது இளம்பெண்; பூரண கர்ப்பிணி; இன்னும் ஒரு வாரத்தில் குழந்தை பிறந்துவிடும் என்று டாக்டர்கள் கெடு வைத்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட தனிரை — நடக்கவே சிரமப்படும் அந்தவேளையில், எழுந்து உட்காரவே கஷ்டமாக இருக்கும் அந்த நிலையில் — துள்ளித் துடிக்க, உருண்டு, புரண்டு, கதறித் துடிக்கும்படியாக —

அவள்மேல் மண்ணெண்ணெயை ஊற்றிக் கொளுத்தி இருக்கிறார்கள்!

இவர்கள் மனிதர்களா? மனித வடிவெடுத்த மிருகங்களா? அதிலும் அவளைப்

# ரொம்ப நாளாக ஒரு மனக் குமுறல்

தினசரி பேப்பரை பிரிக்கும்போதெல்லாம் 'அந்த வகையில்' ஏதாவது ஒரு செய்தி கண்ணில் படாமல் இருக்காது. அதைப் படிக்கும் போதெல்லாம் மனசு வெந்து நீராகும்.

பெண்மை!

அதைத்தான் நம் பாரததேசம் எத்தனை உயர்வாக மதித்தது. நதிகளுக்கும், கடவுளுக்கும், இயற்கைக்கும், காணும் —வணங்கும் பொருள்களுக்கெல்லாம் பெண்ணின் பெயரைச் சூட்டி மகிழ்ந்தது. பெண் குழந்தை பிறந்து வளர்ந்து பருவம் எய்திப் பூத்துச் குலுங்குவதே ஒரு அழகுதான். பெண் குழந்தை பெற்று வளர்த்தவர்களுக்குத்தான் அந்தச் சொர்க்கம் புரியும்!

ஆனால்—

இளம் மனைவி தீயில் கருகி சாவு!

வரதட்சணை கொடுமையால் இளம் பெண் தற்கொலை!

கணவனும், மாமியாரும் மனைவியை எரிப்பு!

இப்படிப்பட்ட செய்திகள் நாள் தவறாமல் பத்திரிகைகளில் வர ஆரம்பித்து விட்டன. இதற்கா இந்தக் குழந்தையை வளர்க்கிறோம் பொட்டிட்டு, பூச்சூட்டி அழகு பார்த்து, படிக்க வைத்து, பார்த்துப் பார்த்து மணமகனைத் தேடி மணக்கோலத்தில் கண்டு மகிழ்ந்து...

எல்லாம் அவள் கரிக்கட்டையாகவா?

உடம்பெல்லாம் வெந்து சாகவா?

எனித்த அவல நிலை? மனிதத் தன்மையே நம் தேசத்தில் இல்லாமல் போய்விட்டதா?

போலவே பெண்ணான ஒருத்தி மாமியார் என்ற பெயரில் கூட இருந்து எண்ணெயை ஊற்றியிருக்கிறாள்.

அந்த இளம்பெண்ணின் கதறலைக் கேட்டு ஓடிவந்த அக்கம்பக்கக் குடித்தனக்காரர்களையெல்லாம் உள்ளே விடாமல் தடுத்திருக்கிறார்கள் கிராதகர்கள். அதையும் மீறி, உள்ளே புகுந்து, அதற்குள் எழுபது சதவீதம் வெந்து போய்விட்ட அந்தப் பெண்ணை வெளியே கொண்டு வந்த போது பூரண நினைவுடன் துடித்துக் கொண்டிருந்த அவள், மாமியார்க்காரியைக் காட்டி, "இவள்தான் என்மேல் மண்ணெண்ணெயை ஊற்றினாள்" என்று கதறியிருக்கிறாள். மருத்துவமனைக்கு அவளை எடுத்துச் சென்றும் பலனில்லாமல் மறுநாள் அவள் இறந்துவிட்டாள். கல்யாணமாகி ஒரு வருடத்தில் தான் பட்ட சுகம் போதும் என்று கண்ணை மூடிவிட்டாள். ஆனால் அவளுடைய மரண வாக்குமூலத்தைப் பார்த்த அக்கம்பக்கத்துக்காரர்களுக்கு அதிர்ச்சி!

'தன்மேல் தற்செயலாக நெருப்புப் பட்டு எரிந்து விட்டதாக' அவள் கூறினாளாம். இது எப்படிச் சாத்தியம்? அவளை மருத்துவமனைக்குக் கொண்டு போகும்வரையும் கணவனையும், மாமியாரையும் காட்டி இவர்கள்தான் என்மேல் நெருப்பிட்டார்கள் என்று துடித்தவள் எப்படி இப்படிச் சொன்னாள்? சந்தேகப்பட்ட அந்தப் புண்ணியவான்கள் அனைவரும் சேர்ந்து

கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்திருக்கிறார்கள்.

விசாரணையின் முடிவில் நீதிபதி திரு. அகர்வால் மனம் குமுறி அந்தத் தீர்ப்பை எழுதியிருக்கிறார். இந்தக் கிராதகர்களின் போக்கிற்குத் துணைபோன சப்-இன்ஸ்பெக்டர் சுக்விந்தர் சிங் மீதும், டில்லி செயின்ட் ஸ்டீபன்ஸ் ஆஸ்பத்திரி டாக்டர் ஜே. ஜோசப் மீதும் கடுமையான நடவடிக்கைகளை எடுக்க வேண்டும் என்று கூறினார். இதுபோன்ற கொடுமையைச் செய்த மாமியார் சகுந்தலாதேவி, கணவர் லக்ஷ்மண் குமார், அவனுடைய அண்ணன் சுபாஷ் சந்தர் மூவருக்கும் தூக்கு தண்டனையை விதித்துத் தீர்ப்புக் கூறியுள்ளார்.

அந்தப் பெண் சுதா செய்த குற்றமெல்லாம் அவள் கர்ப்பமானதுதான். திருமணமான நாளிலிருந்து அவளை வரதட்சணைக்காக எவ்வளவு கொடுமைப் படுத்த முடியுமோ, அவ்வளவையும் செய்திருக்கிறார்கள். முடிந்த மட்டும் தாய் வீட்டிலிருந்து பணத்தைக் கறந்திருக்கிறார்கள். இனி இவளுக்குக் குழந்தை பிறந்து விட்டால் கல்யாண மார்க்கெட்டில் லக்ஷ்மண்குமாரின் மதிப்பு விழுந்துவிடும் என்று குழந்தை பிறக்கும் முன் அவளைத் தீர்த்துக் கட்ட முடிவு செய்திருக்கிறார்கள்!

'கொடுமை' என்ற ஒரு வார்த்தை போதுமோ இதைச் சித்தரிக்க? இவர்களுக்கு மரண தண்டனை விதித்த அதே மாதத்திலேயே மேலும் பத்து இளம் மனைவிகள் கொளுத்தப்பட்டிருக்கிறார்கள். இந்த வருடம் மட்டும் டெல்லியில்—நம்முடைய தலைநகரில் 610 பெண்கள் அக்னிப்பிரவேசம் செய்திருக்கிறார்கள்.

பரம்பரை பரம்பரையாக நமக்கென்று காத்துவந்த பாரதப் பண்பாடும்; மனித நேயமும் காருண்யமும் போய்த்துப்போய் விட்டனவா? விஞ்ஞான வளர்ச்சியில் விண் வெளியில் சுற்றத் தொடங்கியுள்ள நாம், இந்த மண்ணில் பிறந்த மங்கைகளின் அவலநிலையை என்றைக்குப் போக்கப் போகிறோம்?

பேப்பர் வழிச் செய்தி மட்டுமே அல்ல. நம்முடைய தமிழ்நாட்டில் இவர்களைப் போல பலர் அக்கினிப்பிரவேசம் செய்யாவிட்டாலும், மனத்திற்குள்ளே அக்கினி குண்டத்தை வளர்த்துக் கொண்டு வெந்து தழலாகும் பெண்கள் லட்சக்கணக்கில் இருக்கிறார்கள். அதற்கு ஆதாரம், எனக்கு அடிக்கடி வரும் கடிதங்கள். நொந்துபோன தங்களுடைய மனங்களுக்கு ஆறுதலாக எனக்கு எழுதுகிறார்கள், 'இந்தக் கடிதத்தை வெளியிடுங்கள். இதைப்படித்தாவது என் கணவர் திருந்தட்டுமே' என்று. அதில் சமீபத்தில் வந்த கடிதம் என்னை மிகவும் உருக்கி விட்டது.

சென்னையைச் சேர்ந்த அந்தப் பட்டதாரிப் பெண்; அரசாங்க அலுவலகத்தில் கிட்டத்தட்ட ஆயிரம் ரூபாய் சம்பாதிக்கும் பெண். இவருடைய கணவர், தன் தங்கையின் பேச்சைக் கேட்டுக்கொண்டு

சுதாவின் மாமியார், கணவர், மைத்துனர்



செய்யாத கொடுமைகள் கிடையாது. ஒருமுறை வாயைக் கிழித்து நாக்கைப் பிடுங்க வந்துவிட்டாராம். துடித்துப்போன பெண்ணிற்கு ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போகக் கூட நாதி கிடையாது. தானே அலுவலக நடுவில் டாக்டரிடம் போய், பொய் சொல்லி வாய் ரணத்திற்கு மருந்து போட்டுக் கொண்டிருக்கிறார்.

இதன் மூலமாகவே எனக்குக் கடிதம் எழுதிய, எழுதும், எழுதாமலே சித்திர வதைப் பட்டுக் கொண்டிருக்கும் பெண்களுக்கு ஒன்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

வாழ்க்கை என்பது அன்புமயமானது. ஆனால் அது எல்லோருக்குமே தென்றலாக அமைந்து விடுவதில்லை. புயலில் சிக்கிய புல்லாகத் தடுமாற வேண்டி வரும். ஆனால் அந்தச் சமயத்தில் புத்திசாலித்தனமாக, தைரியமாக நடந்து வாழ்க்கையை எதிர்கொள்ளவேண்டுமே தவிர, கோழையாகி தன்னை மாய்த்துக் கொள்வதோ, இல்லை மற்றவர்கள் அந்தக் கைங்கரியத்தைச் செய்ய இடம் கொடுப்பதோ கூடாது.

அப்புறம் படித்த படிப்பிற்கும், சிந்தித்த சிந்தனைகளுக்கும், வாழ்ந்த வாழ்க்கைக்கும் என்ன அர்த்தம்? இதற்காகவா நாம் தாய்–தந்தையர் நம்மை இவ்வளவு தூரம் வளர்த்தனர்?

தான் விரும்பிய ஒரு மெட்டி வாங்கப் பணம் இல்லையே என ஐந்து மாடிக் கட்டிடத்திலிருந்துவிழுந்துமடிந்தபெண்ணின் கதையோ —

கொடுமை தாளாமல் இறந்த பெண்ணைக் கண்டு மயங்கி விழுந்து செத்த அப்பாவின் கதையோ—

இனி இந்தத் தமிழ் மண்ணில் நடக்க வேண்டாம்.

பெண்மை—

அது பவித்திரமானது!

அதன் கடமைகளும், புனிதங்களும் அனந்தம்.

இந்த மண்ணின் புதல்வர்களைப்பெற்று, வளர்த்து சீராட்டி ஒரு சமுதாயத்தையே உருவாக்குவது!

ஒருநாட்டின் கலாசார ஜீவநதி!

அது கேவலம் பண ஆசை பிடித்த, சுயநலப் பிண்டங்களுக்காகவா அடிபணிவது? இல்லை, இனி இது இல்லை என்ற உறுதி எடுத்துக் கொள்ளுங்கள்.

பெண் சமுதாயமாகிய நாமே நம்மை புனர்சிந்தனை செய்து திருத்திக் கொள்ள வேண்டிய காலம் வந்துவிட்டது. புடவைகள் மீதும், பாத்திரங்கள் மீதும், நகைகள் மீதும் ஆசைகொண்டு அதைப்பற்றிப்பேசித் திரியும் பெண்களாக நாம் இருக்கவேண்டாம். வாழ்க்கையின் தேவைகளுக்கு அதைப் பயன்படுத்துவோம். சினிமாக் கதைகளையும், வெறும் ஆடம்பர மோகங்களையும் விட்டொழிப்போம்.

ஒருபெண் கொடுமைப்பட இன்னொரு பெண்ணே துணைபுரிகிறாள் என்ற பழி பாவம் வேண்டாம். படித்த படிப்பும், கிடைத்துள்ள சுதந்திரமும் நாம் உயருவதற்காகத் தரப்பட்டதேயன்றி நம்மை நாமே தாழ்த்திக் கொள்ள அல்ல!

சுய சிந்தனையும், தெளிவான எண்ணங்களும், உயர்ந்த பண்புகளும், மனதில் கம்பீரமும், வாழ்க்கையில் அற்பச் சிறு நினைவுகள் இல்லாத மகத்துவமும் குடிகொண்டு விட்டால் நம்மை வெல்ல யாராலும் முடியாது.

நம்மை நாமே சீர்திருத்தி உயர்த்திக் கொள்வதே முதலான தலையாய கடமையாகக் கொள்ளுவோம்.

---



## இட்லி மாவில் ஒரு போண்டா!

இட்லி மாவு குறைவான அளவில் மீந்துவிட்டால் மறுநாள் காலையில் அதனுடன் அதேஅளவு ஜவ்வரிசியைக் கலந்து ஒருமணி நேரம் ஊறியபின் உப்பு, பச்சை மிளகாய், வெங்காயம் கறிவேப்பிலை சேர்த்துப் பிசைந்து, குனுக்கு போல் எண்ணையில் போட்டு பொன்னிறமாக எடுக்கவும். மொறு மொறுவென்று ஜவ்வரிசி போண்டா, தேங்காய்ச் சட்டினியுடன் சாப்பிடச் சுவையாக இருக்கும்!

-ரமாமணி

# நல்ல பெண்மணி!...



திருமதி பங்கஜம்

திருமணமாகி ஒரு குழந்தையும் ஆகிவிட்டாலே வாழ்க்கை அலுத்துவிடுகிறது பெரும்பாலான பெண்களுக்கு. ஆனால் திருமதி பங்கஜம் ''நான் இன்னும் மாணவிதான். கல்விக்கு வயது வரம்பேது? நாம் வாழும் ஒவ்வொரு நொடியும் புதிது புதிதாக எதையாவது கற்றுக் கொண்டே இருக்க வேண்டும்'' என்று கூறுகிறார்!

அப்படி இந்த இசைப் பட்டதாரி கற்றுக் கொண்டது. தபால் மூலம் இசையில் மேல் பட்டப் படிப்பு, வீடெல்லாம் கலை மணக்கச் செய்தது, தன் மகள்கள் பேத்திகளுக்கு இசையைக் கற்றுக் கொடுத்தது. வீட்டையே கலைக் கோவிலாக்கியதுதான்! வாழ்க்கையில் ஒவ்வொரு நொடியையும் பயனுள்ள வகையில் வாழ்வதே ஒரு சிறந்த வாழ்க்கைக்கு எடுத்துக் காட்டுதானே!

—சீதாராகவன்

தனபாக்கியம்



ஒரு துறையில் சிறந்திருந்தாலே சாதனையாளர் வரிசையில் சேர்த்து விடுகிறோம். மிக இளைய வயதிலேயே பேச்சு, எழுத்து, நடனம், வீணை, எனச் சிறந்திருந்தால்....? அதனால்தான் இருபத்தி நாலே வயதான குமாரி தனபாக்கியத்தைப் புதுக்கோட்டை திலகவதியம்மையார் ஆதீனம் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தது.

எம். ஏ. பட்டதாரியான இந்தச் சகல கலா வல்லவி தான் மட்டும் சிறப்படையாமல், எல்லாரையும் சிறக்கச் செய்யப் பாடுபடுவதால்தான் 'நல்ல பெண்மணி'யாகிறார். கல்வி கற்க விரும்பும் மாணவ மாணவிகளுக்குக் கற்றுத் தருவது. கிராம மக்களுக்குத் தேவையான உதவிகள் எனச் சுற்றுப்புறத்தையும், சிறக்கச் செய்கிறார். தான் கற்ற கலைகளைப் பிறருக்குச் சொல்லிக்கொடுக்கவும் செய்கிறார்.

—ராஜலெக்ஷ்மி.



கல்யாணி ராமசுவாமி

திருப்புகழையே தன் வாழ்க்கையாகக் கொண்டு, பக்தியையே தன் கொள்கையாக்கி வாழ்ந்து வரும் திருமதி கல்யாணி ராமசுவாமி மன அமைதியை வாரி வழங்குகிறார். தான் கற்றுக்கொண்ட மூக பஞ்ச சதி, பகவத் கீதை, திருப்புகழ், இராமாயணம் இவற்றைப் பிரதி பலன் எதிர்பாராமல் வாரி வழங்குகிறார். வாழ்வில் எது கிடைத்தாலும், கிடைக்காத நிம்மதியையே தன் சேவையாகக் கொண்டுள்ள இவரைப் பார்த்து உரையாடுவதே ஒரு புண்ணியம்தான்.

—அலமேலு சந்தானம்



ரமணி ரங்கநாதன்

பெண்கள் அதிகம் ஈடுபடாத ஓவியத் துறையில் ஈடுபாடு கொண்டு, தானே ஓவியத்தைக் கற்றுக் கொண்டு தேர்ச்சி பெற்றவர் திருமதி ரமணி ரங்கநாதன். எழுத்தாற்றலும் மிக்க இவருக்கு ஒரு

நாளில் இருபத்தி நாலு மணி நேரமும் போதவில்லையாம். தன்னைச் சுற்றியுள்ளவர்களுக்கும் தன்னைப் போலவே ஓவியக் கலையில் ஈடுபாட்டை ஏற்படுத்துவதில் வல்லவர். நட்பே உருவான இவரை நாடிப் பலரும் பல கலைகளைக் கற்க வருவதற்கு இதுவே காரணம் போதும்.

—'மிக்கி'



**சியாமளா ராகவன்**

தமது பெண், பிள்ளைகட்கு இடம் தேடி மணம் முடிக்க இயலாத பெற்றோர்கட்கு ஜாதகங்களைத் திரட்டி, ஜாதக பரிவர்த்தனை செய்து பல திருமணங்களை நடத்தியுள்ளவர் சியாமளா ராகவன். தம்மைப் பற்றிப் பலரும் அறிந்துகொள்ளவோ அல்லது தம்மைப் புகழ்ந்து கொள்ளவோ விரும்பவில்லை. ஆனால் தமது அறிவும் செயலும் பிறருக்குப் பயன் படுவதை அறிந்து மிக்க மன நிறைவோடு வாழுகின்றார். தான் அறிந்த கலை வகைகள், நூதன சமையல் முறைகள் முதலியவற்றையும் மற்றவர்களுக்குக் கற்றுத் தருகிறார்.

இவ்வம்மையார் பிறருக்கு உதவும் வகையில், காலம், நேரம், இன்னார் இனியவர், தகுதி முதலியவைகளின்றி தொலை பேசி மூலம் தொடர்பு கொண்டுள்ளார்.

''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்ற பழம் பெருமையை நிலைநாட்டிய மேற்கு மாம்பல வாசியாவார்.

—ஆர். ஜெயலட்சுமி

**திருமதி ருக்மணி**

எப்பொழுதும் சிரித்த முகம் அப்பொழுதுதான் குளித்து வந்தது போல் பளிச்சென்ற தோற்றம், சிறியவர்கள்

முதல் பெரியவர்கள் வரை யாவரையும் இன்முகத்துடன் வரவேற்று உபசரிக்கும் பண்பு. தன் உள்ளத்தில் எவ்வளவோ கவலைகள் இருந்த போதிலும் அவைகளை வெளியே காட்டாமல், கல்யாணமோ, சாவோ அல்லது பிரசவமோ எதுவாக இருந்தாலும், எந்த நேரமானாலும் கூப்பிட்ட உடன் சென்று உதவுவதுடன் இல்லறத்தையும் பாங்குடன் நடத்தி வாழ்ந்து காட்டியவர் ஸ்ரீமதி ருக்மணி.

தனது வலது கை செய்வது இடது கைக்குத் தெரியக் கூடாது என்பது போல விளம்பரம் இன்றி அநேக தான தர்மங்கள் செய்து வந்தவர். தனது உறவினரில் சிலர் படிக்க சக்தி இருந்த போதிலும் பொருளாதார நிலையினால் அவர்களின் படிப்பு தடைபடக் கூடாது என்று கருதி உதவிசெய்து அவர்களும் நன்கு படித்து இன்று நல்ல நிலையில் உள்ளார்கள்.

இன்று சமூகத்தில் தினமும் பேசி அலசப்பட்டு வரும் வரதட்சிணைப் பிரச்னையைச் சட்டத்தின் மூலமாக ஒழிக்க முடியாது என்றும், அந்தந்தக் குடும்



பத்தில் உள்ள தாய்மார்கள் மனது வைத்தால்தான் இதை அடியோடு ஒழிக்க முடியும் என்று கருத்துக் கொண்டதோடு மட்டுமல்லாமல் தனது குடும்பத்தினரின் திருமணத்திற்கு வரதட்சிணை வாங்காமல் திருமணம் செய்து காட்டியவர்.

—சரோஜா

**திருமதி துபாஷ் ஹஸினா**

தீண்டாமை பற்றி வாயளவில் பேசி சுயநலம் வளர்க்கும் இக்காலத்தில் துபாஷ் ஹஸினா என்ற முஸ்லிம் மாது (வயது 50) காலம் காலமாக ஹரிஜனங்

# மிக நல்ல பெண்மணி...



களுடன் சரி சமமாகப் பழகி வருகிறார். ஹரிஜனங்களின் கல்யாணங்களில் பங்கெடுத்துக் கொள்வதிலும் அவர்களுடன் விருந்துண்பதிலும் இவருக்கு அலாதிப் பிரியம். ஒரு ஹரிஜனப் பெண்ணின் கல்யாணத்தையே தன் செலவில் நடத்தி வைத்தார்.

இவர் தன் ஆதரவிலேயே ஒரு மாதர் சங்கம் நடத்தி வருகிறார். சமையல் கலையில் மிகவும் தேர்ச்சி பெற்றவர். தினமும் அதிகாலை 3 மணிக்கு தெய்வ வழிபாட்டில் ஈடுபடுபவர். தன்னுடைய 30 வருட குடும்ப வாழ்வில் ஒரு நாளாவது தன் கணவனுடன் சண்டை பிடித்தது இல்லை. கோபம் என்பது எள்ளளவும் இல்லை.

—டி. கே. எம். அப்துல் ரஸாக்

**டாக்டர் விஜயலட்சுமி சேகர்**

டாக்டர் விஜயலட்சுமி சேகர் ஒரு டாக்டராக இருந்து கொண்டு எல்லாத் துறைகளிலுமே சாதனைகள் புரிபவர்.

ஸ்ரீரங்கம் அபிராமி மண்டலி மாதர் சங்கத்தின் தலைவி. திருச்சி அரிமா மகளிர் சங்கத்தின் டைரக்டர், ஸ்ரீரங்கம் உபயோகிப்பாளர் பாதுகாப்பு சங்கத்தின் தலைவி. இன்னும் பல சங்கங்களின் முக்கிய அங்கத்தினராக இருந்து ஏழை எளியவர்களுக்காக இவர் ஆற்றி வரும் சமூகத் தொண்டு வியக்கத் தக்கது.

கைவேலைகளில் அபாரத் திறமை



வாய்ந்தவர். வீடு முழுவதும் இவர் கைவண்ணம் — நூற்றுக் கணக்கில் பொம்மைகள், தஞ்சாவூர் கண்ணாடி வேலைகள், பெயிண்டிங்குகள், அற்புத ஓவியங்கள், திரைச் சீலைகள் பிரமிக்க வைக்கின்றன.

திருமதி ரேவதி முத்துஸ்வாமி

**டி. எஸ். வாலாம்பாள்**

சமையல் குறிப்புகள் எழுதுவதையும் பாசி, ஊசி மணி வேலைகள் செய்வதையும் பெரிய சாதனைகளாக நினைக்கும் இந்தக் காலத்தில் சகஜமாகவே அரிய சாதனைகளைத் தன் எண்பதாவது வயதிலும் செய்து வரும் இந்த அம்மாள் புதுக்கோட்டையைச் சேர்ந்தவர். பூஜை, பஜனைகளில் மிகுந்த ஈடுபாடு உடைய இவருடைய சாதனைகளுக்கு ஒரு பட்டியலே போடலாம்.



ஏழை, எளிய பெண்களுக்கு தங்களால் ஆன உதவியைச் செய்து, தங்கள் இல்லத்திலேயே திருமணம் செய்து வைக்கிறார். ஜாதகங்கள் பொருத்தம் பார்த்து உதவி வரும் இவர் வரதட்சிணைக் கொடுமையை ஒழிக்க, ''விவாக நலச் சங்கம்'' என்ற ஒன்றை ஏற்படுத்தி 500 ரூபாய்க்குள் திருமணங்கள் நடத்தி யிருக்கிறார்

ஊர் பெயர் தெரியாமல், உறவுமில்லாதவர்கள் வந்து, ''என் பெண் கல்யாணத்தை உங்கள் வீட்டில் நடத்திக்கொள்கிறேன்'' என்றால், சிறிது கூட யோசிக்காமல், அவர்களிடம் எந்தப் பிரதிபலனையும் எதிர் பார்க்காமல் தன் இல்லத்தையே கொடுத்து உதவுவதோடு மட்டுமல்லாமல், திருமணத்திற்கு வேண்டிய சமையல் பாத்திரங்களைக் கூடக் கொடுத்து உதவுவதை ஒரு வழக்கமாகக் கொண்டிருக்கிறார்.

—எஸ். சியாமளா

# காதுகளுக்கு வேண்டியது
# ஜான்ஸன்ஸ் பட்ஸ்





©J&J 83

## பத்திரமாக
## சுத்தம் செய்வீர்

உபயோகிப்பீர் ஜான்ஸன்ஸ் பட்ஸ்.
ஜான்ஸன்ஸ் பட்ஸ், இரு முனைகளிலும்
பஞ்சுடன் கூடிய பாதுகாப்பான
வளையக்கூடிய குச்சிகள் கொண்டவை.
காதுகளைச் சுத்தம் செய்வதற்கு அல்லது
ஏராளமான இதர உபயோகங்களுக்குச்
சிறந்தவை. எங்கும் உபயோகிக்க
எளிதானது. பாதுகாப்பானது.
50, 100 மற்றும் 150 உள்ள பேக்குகளில்
கிடைக்கின்றன.




Johnson & Johnson

OBM/3842 TAM

எங்கள் வாழ்க்கையில் நாங்கள் நினைத்துக் கூடப் பார்க்க முடியாத விஷயங்கள், சொந்தத்தில் வீடு, மிக்ஸி, கார்... இத்யாதிகளுடன் கடைசியாக ஒரு கடிகாரம். ஆம், கடிகாரமேதான்.

என்றோ தனிக்குடித்தனம் போகும்போது என் தந்தை ஒரு டைம்பீஸ் வாங்கித் தந்தார். இருட்டில் பச்சை ஒளி காட்டும் ரேடியம் உள்ள கடிகாரம்தான். எங்களுக்குத் தெரிந்தவரை நாங்கள் அதை ஜாக்கிரதையாகத்தான் பாதுகாத்து வந்ததாக நினைவு. குழந்தைகளின் கைகளுக்குக் கூட எட்டவிடாமல், 'ஒயிண்ட்' பண்ணும் போது பத்திரமாக...

எல்லாம் முதல் பையன் இரட்டைவால் பாபுவுக்கு ஏழெட்டு வயது ஆகும் வரைதான். ஒருநாள் நானும் அவருமாக விடுமுறை நாள் ஒன்றில் ஒரு உறவினரின் அவசர அழைப்பை ஏற்றுப் போய் விட்டு, குழந்தைகளைத் தனியாக விட்டுவிட்டு வந்து விட்டோமே என்ற திகில் பதைபதைப்புடன் ஓடி வந்தோம். நடுக்கூடத்தில், பஞ்சு, பினாஸ்திரி, கத்தரிக்கோல் சகிதம் உட்கார்ந்து கொண்டிருந்த பாபுவைக்கண்டதும் அலறி விட்டேன் பயத்தில். ''யாருக்கு என்னடா ஆச்சு...''

லதாக்குட்டி அண்ணனுக்குப் பரிந்து வந்தது. ''ஒண்ணுமில்லேம்மா. டைம்பீஸ் இல்ல... அது 'தொபால்'னு கீழே விழுந்துடுத்து... இதோ...''

டைம்பீஸ் இரண்டாக, கண்ணாடி தனியாக வந்து அதில் உட்பக்க ஓரமாக பஞ்சடைத்து, பினாஸ்திரி ஒட்டி, சர்வாலங்காரத்துடன் காட்சி அளித்தது. அதை ரிப்பேர் செய்யும் செலவில் புதிதாக ஒன்று வாங்கி விடலாமே என்ற நப்பாசையுடன், தூக்கிப் போட மனமும் இல்லாமல், பாபுவின் கைவண்ணத்துக்குச் சான்றாக இன்னமும் பரணில் தூங்குகிறது.

அவருக்கு ஆபீஸில் பிரமோஷன்கிடைத்தது. வேறு பிரிவுக்கு மாற்றலாகிப்போகும் போது, அலுவலகத்தில் பிரிவு உபசார விருந்து வைத்து, ஒரு அழகிய கருநீலக் கலரில், பச்சை நம்பர்களுடன் ஒரு 'டைம் பீஸ்' பரிசாக அளித்தனர். எங்களுக்கு எத்தகைய பேறு என்று பாதுகாத்து வந்தோம் அதை. பாபுவும் லதாவும் பயத்துடன்தான் அதைப் பார்ப்பார்கள்.

# சந்தி கா நாம் கடீ



தைக்காட்ட பேனாவைத் தட்ட கடிகாரம் தடுமாறி விழுந்திருக்கிறது. அப்பொழுது ஸ்க்ரு உடைந்து விழுந்திருப்பதை கவனிக்காமல், அவை பழுசமர்த்தாக அதை எடுத்து மேலே வைத்து விட்டார்கள். கடைசியில் அதை வேலைக்காரி பெருக்கித் தள்ளி விட்டாள். எங்கு தேடியும் கிடைத்தால்தானே! கடைகளில் அந்த 'ஸ்க்ரு' இல்லை என்று சொல்லிவிட..... ஏதோ ஓடிக்கொண்டிருக்கிறதே என்ற சந்தோஷத்துடன் அது காட்டும் நேரத்துடன் கூட்டியோ, கழித்தோ, நேரத்தை கணக்கிட்டு வந்தோம்.

என் தம்பி லண்டன் போனதற்கு அடையாளமாக ஒரு அழகிய கடிகாரத்தை வாங்கி அளித்தான். அழகிய வாவர் வடிவத்தில் பூக்களுடன் மிகவும் அழகாய் இருந்தது.

''பேட்டரி ஆபரேட்' கடிகாரம். உனக்கு சிரமமே இல்லை. பேட்டரி மாத்திரம் மாற்றினால் போதும்'' என்று தன் கையாலேயே ஆணி அடித்து மாட்டிவிட்டுப் போனான்.

ஒரு மாதம் ஒழுங்காக ஓடியது. தெரிந்தவர், தெரியாதவர்களையெல்லாம் அழைத்து வந்து காட்டினேன்.

மார்கழி மாதக் குளிரில் சீக்கிரம் எழுந்திருக்க வேண்டும். பாபுவுக்கு அரைப் பரீட்சை. எட்டு மணிக்கு ஸ்கூல் போக வேண்டும். ஒருநாள் காலை மணி நாலு என்று அலாரம் அறிவித்தவுடன், அவசரம் அவசரமாக எழுந்திருந்து, சமையலை முடித்து, பாபுவையும் எழுப்பி குளிக்கச் செய்தேன். இன்னும் இருள் பிரியாமல் பனி மூடிக்கிடந்தது. மார்கழி மாதம் அப்படித்தான் இருக்கும் என்று நினைத்து, அவனுக்கு சாதமும் போட்டு, இன்னமும் வராத பால்காரனை மனதுக்குள் திட்டியவாறு, பாபுவை பள்ளிக்குத் தயார்செய்தபோது, ஐந்து மணி என்று கூவியது. நான் அசந்துபோனேன்.

''என்னன்னு அநியாயம்! நம்மாத்துக் கடிகாரம் எழுமணியைக் காண்பிக்கிறது...''

''அது லண்டன் கடிகாரம். அப்படித்தான். கூட்டிக் கழித்து தான் பார்க்கவேண்டும்'' என்று சமயம் தெரியாமல் 'ஜோக்' அடித்து என் கோபத்தைக் கிளற, நான் மௌனமாக மீண்டும் பாபு பக்கத்திலபடுக்கையில் சாய்ந்தேன்.

இத்தனை வருடமாகிறதே! இன்னும் சரியாக நேரத்தைக் காண்பிக்க எங்கள் வீட்டில் கடிகாரம் கிடையாது.

''சல் நீ கா நாம் கடி'' என்பதுபோல நான்கு கடிகாரங்கள் நான்கு விதமாக ஓடி நான்கு விதமான மணியை காண்பிக்கின்றன. அதனால் தயவு செய்து எனக்குக் கடிகாரத்தை மாத்திரம் யாரும் பரிசளித்துவிடாதீர்கள். எங்கள் வீட்டுப் பரணில் இடமில்லை!

# இம்மாத இல்லத்தரசி போட்டி

பொருள்: ஊறுகாய் வகைகள்

முடிவு தேதி: 15-8-83

**சமையல் கூப்பன்**

................ என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# தொற்றுநோய் எளிதாகப் பரவும்!

கோடை விடுமுறை முடிந்து பள்ளிகள் திறந்து சில நாட்களாகி விட்டன. டாக்டர்களிடம் கூட்டமும் வர ஆரம்பித்து விட்டது. பொதுவாக ஏன் இதுபோல் பள்ளி திறந்த உடனேயே நோய்களும் ஆரம்பித்து விடுகின்றன? குழந்தை மருத்துவ நிபுணர் டாக்டர் எல். சுந்தரத்தை கேட்டபோது—

“லீவு நாட்களில் பெற்றோர்கள் குழந்தைகளை நன்றாகப் பாதுகாப்பார்கள். வேளா வேளைக்கு உணவு, சரியான நேரத்தில் ஓய்வு இப்படி அதிகப் பிரச்சினைகள் இல்லாமல் போய்விடும். பலர் வெளியூர்களுக்கும் போய் வருவார்கள். பள்ளி திறந்தவுடன்தான் எல்லாப் பிரச்சினைகளும் ஆரம்பமாகின்றன.

இன்ஃபெக்ஷன் என்னும் தொற்று நோய் ஒரு குழந்தையிடமிருந்து மற்றொரு குழந்தைக்கு எளிதாகப் பரவிவிடுகிறது. சில நோயும். இருமல் முதலியவை ஏற்படும் போது பெற்றோர் இதற்காகக் குழந்தைகளை லீவு போட விடுவதில்லை. ஸ்கூல் ஆரம்பித்த உடனேயே லீவு எடுப்பதா என்று குழந்தைகளுக்கு மருந்தைக் கொடுத்துப் பள்ளிக்கு துரத்தி விடுவார்கள். இந்தச் சளி, இருமல் முதலியவை வெகு எளிதாக மற்ற குழந்தைகளுக்கும் பரவி விடுகிறது. எதிர்ப்புச் சக்தி உடலில் இல்லாத குழந்தைகளுக்கு இந்தச் சளி இருமலோடு நிற்காமல் ப்ராங்கோ சைட், பாராங்கோ நிமோனியா முதலியவையும் ஏற்பட்டு விடுகின்றன. இது குழந்தையின் உடலை அதிகம் பாதித்து, ஊசி, மருந்து என்று நீண்ட சிகிச்சைக்கு அனுப்பிவிடுகிறது.

பொதுவாகச் சளி வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்றுதான் எந்தத் தாயும் விரும்புவாள். பலர் 'சி' வைட்டமின் மாத்திரைகளைக் குழந்தைகளுக்குத் தருகிறார்கள். ஆனால் எட்டு வயது வரை குழந்தைகளுக்கு இந்த ஜலதோஷத்தை எதிர்க்கும் சக்தி உடலில் இருப்பதில்லை. எனவே எப்படிப்பட்ட குழந்தைக்கும் மூக்கு ஒழுகுகிறது.

இதேபோல் இந்த மாதிரி நாட்களில் டைபாய்ட், ஜான்டிஸ் போன்ற நோய்களும் வருகின்றன. அதுவும் தண்ணீர்ப் பிரச்சினை எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்து விட்டது. 'நாங்கள் எங்கள் குழந்தைகளுக்கு தண்ணீரைக் காய்ச்சித்தான் கொடுத்தனுப்புகிறோம். அப்படியும் ஜுரம் வந்து விட்டது டாக்டர்!' என்பார்கள். ஆனால் என்னதான் நாம் தண்ணீரைக் கொடுத்தனுப்பினாலும் குழந்தைகளுக்குக் குழாயைப் பார்த்தவுடன் ஒரு கவர்ச்சி ஏற்பட்டு விடுகிறது. குழாயைத் திறந்து விட்டு அந்தத் தண்ணீரைக் குடிப்பதென்றால் படு குஷி.

அதே போல் ஒரு குழந்தை கொண்டுவரும் நீரை மற்றொன்று குடித்து விடும். இதனாலும் முதல் குழந்தையிலிருந்து இந்தக் குழந்தைக்கு நோய்கள் தொற்ற வாய்ப்புண்டு.

இவற்றைத் தடுக்கப் பள்ளிகள் தீவிர நடவடிக்கை எடுக்க வேண்டும். நன்கு காய்ச்சிய தண்ணீரையே குழந்தைகளுக்குக் குடிதண்ணீராகத் தர வேண்டும். தங்களுக்கு அருகில் உள்ள பள்ளிகளுக்கு மாதர் சங்கங்கள், பொதுச் சேவை நிறுவனங்கள் இப்படிக் குடிநீரைக் காய்ச்சித் தர ஏற்பாடு செய்வதைக் கூட ஒரு சமூக சேவையாகக் கொள்ளலாம்.

குழந்தைகளுக்கு இது போன்ற தொத்து வியாதிகள் வராமல் இருக்க டி. பி. டி. (D.P.T.) டி. டி. (D.T.) முதலிய தடுப்பூசிகளைப் பள்ளி திறக்கு முன் போடுவது நல்லது.



இதனால் குழந்தைகளிடையே உருக்கிவிடும் டைபாய்டு, கக்குவான் இருமல், ஜுரங்கள் போன்றவை வராமல் தடுக்கலாம்.

பள்ளி திறக்கும் இந்த வேளையில் வெளிப்படுகின்ற மற்ற நோய்கள் கண் பார்வை சரியில்லாமை, காது சரியாகக் கேளாமை முதலியவை. போர்டில் டீச்சர் என்ன எழுதுகிறார் என்பது மாணவனுக்குத் தெரியாமல் இருக்கலாம். அதே போல் அவர் வகுப்பில் பாடம் சொல்லும்போது சரியாகக் கேட்காமலும் போகும்.

இந்த இடத்தில்தான் புதியதாக வகுப்புக்கு வரும் ஆசிரியரின் பங்கு பெரியதாகிறது. குழந்தைகளின் பிரச்சினை என்ன என்பதைப் புரிந்து கொண்டு, அதை நிவர்த்திக்க முயல வேண்டும். அதை விட்டு விட்டு எடுத்தவுடனேயே பாடங்களைக் கவனிக்க முடியாத பையனை மக்குப் பையன் என்று நாமகரணம் சூட்டக் கூடாது. அவனுக்குத் தண்டனை தரக் கூடாது.

குறையுள்ள குழந்தை என்றில்லை. சாதாரணக் குழந்தைகளுக்கும் புதிய வகுப்பிற்குத் தாங்கள் வந்ததும், புதிய ஆசிரியர் அறிமுகமானதும் ஒரு பிரச்சினையாகத்தான் இருக்கும். இதனால் ஆசிரியர் மாணவர்களைப் புரிந்து கொள்ளவும், மாணவர்கள் ஆசிரியரைப் புரிந்து கொள்ளவும் சில மாதங்கள் ஆகும். இதற்கு இடைப்பட்ட நிலையில் மனம் சம்பந்தப்பட்ட பிரச்சினைகள் எழும். ஆசிரியரைப் பிடிக்காமல் அதனால் பாடத்தைக் கவனிக்காமல், உடலுக்கு நோயை இழுத்து விட்டுக் கொள்ளும் குழந்தைகளும் கூட உண்டு.

இந்தச் சமயத்தில்தான் பெற்றோர்களின் உதவி தேவையாகிறது. இவை அனைத்தையும் புரிந்து கொண்டு, குழந்தைக்கும் ஆசிரியருக்கும் ஒரு பாலமாக இவர்கள் விளங்க வேண்டும். குழந்தையைப் பள்ளிக்கு அனுப்புவதோடு இவர்கள் பிரச்சினை முடிந்து விடுவதில்லை. அவர்களுடைய ஆசிரியர்களைப் பார்த்துக் குழந்தைகளின் நிறை குறைகளைத் தெரிந்து கொள்ள வேண்டும். ஒரு வகுப்பில் நாற்பது மாணவர்கள் இருந்தால் ஒவ்வொருவரையும் தனித் தனியாகக் கவனிக்க முடியாது. எனவே பெற்றோர்கள் தங்களுடைய குழந்தையைச் சரியாகப் புரிந்து கொண்டு ஆசிரியர்களுக்கும் புரிய வைக்க வேண்டும்.

மற்றபடி இந்த நாட்களில் குழந்தை நோய்வாய்ப்படாமல் பாதுகாக்க காய்ச்சிய தண்ணீரைக் குடிக்கத் தருவது, தடுப்பூசிகளைப் போடுவது முதலியவற்றை மேற்கொள்ள வேண்டும். இது மழைக் காலமாக இருப்பதால் முன்னெச்சரிக்கையுடன் இருந்து விட்டால் குழந்தையைப் பத்திரமாகப் பாதுகாத்துக் கொண்டு விடலாம்.

—சத்யப்ரியா



எங்களைக் கேட்டால்
மணவாழ்வில் மனநிறைவுக்கு
**எல்லாத் தம்பதிகளுமே**

# காளி காப்பர் பாட்டம்

**வாங்கிடவேண்டும் என்போம்**



தாம்பத்திய வாழ்வின் மகிழ்ச்சியில் குறுக்கிடும் சமையல்-சம்பந்தமான பிரச்சினைகளுக்கு இடமேயில்லை, காளி காப்பர் பாட்டம் வாங்கி விட்டால்!

சமையல்வேலை மிக சுலப மானதொரு நுண்கலை ஆகி விடுகிறது. மின்னல்வேக சமையல்— நேரம் தவிர எரி பொருள் செலவிலும் 60% வரை கூட சேமிப்பு




சாதாரண உணவும் அதி பக்குவமாக சமைக்கப் பட்ட விருந்தாக மலரு கின்றது.

காளி செப்பு அடிப்பாக முடைய ஸ்டெயின்லஸ் ஸ்டீல் பாத்திரங்கள் — உங்களுக்கு நீங்களே பரிசாக அளித்துக் கொள்ளவும் இணையற்றது.

இன்றே அருகிலுள்ள பிரபல பாத்திர வியாபாரியை அணுகுங்கள்.




விற்பனை ஏஜன்ட்:
ஸ்ரீ வித்யா ஏஜன்ஸீஸ்.
கும்பேசுவரர் சன்னதி,
கும்பகோணம் 612 001






மண்டல ஏஜன்ட்: ஸம்மு & கோ., த.பெ. நெ. 1049,
ம. கா. ரோடு, எர்ணாகுளம், கொச்சின் 682 011. போன்: 31139

சீரகம் அரை டீஸ்பூன்
உப்பு தேவையான அளவு
வெங்காயம் 50 கிராம்
பச்சைக் கொத்தமல்லி
ஒரு கப் ஜீனி
இரண்டு ஏலக்காய்
ஒரு தேங்காய்

**செய்முறை:**

கோதுமை மாவை நன்றாகச் சலித்துவிட்டு ஒரு வெள்ளைத் துணியில் வைத்து ஆவியில் வேகவைக்கவும். 15 நிமிடங்கள் கழித்து மாவை எடுத்துத் தட்டில் கொட்டவும். மாவு சிறிது ஆறிய பிறகு உப்புத்தண்ணீரைத் தெளித்து தேன்குழல் மாவு போல் பிசைந்து வைத்துக் கொள்ளவும். பிறகு இட்லித் தட்டில் இலை போட்டு முறுக்கு அச்சில் மாவைப் போட்டுப் பிழிந்து கொள்ளவும். பிறகு இதனை ஆவியில் வேகவைத்து 10 நிமிடங்கள் கழித்து எடுக்கவும். இதே போல் மீதியுள்ள மாவையும் பிசைந்து கொண்டு முறுக்கு அச்சில் இட்டுப் பிழிந்து ஆவியில் வைத்து எடுக்க வேண்டும். இதனை நன்றாக ஆறவைக்க வேண்டும்.

வாணலியில் இரண்டு ஸ்பூன் நெய்யை விட்டு சீரகத்தை வெடிக்க விட்டு காய்கறி எல்லாவற்றையும் பொடிப் பொடியாக நறுக்கி, பட்டாணியை உரித்துப் போட்டு, நன்றாகத் தண்ணீரைத் தெளித்து மூடி வதக்கவும். காய்கறி வெந்ததும் தேவையான அளவு உப்பைப் போட்டுப் பச்சைக் கொத்தமல்லி, கறிவேப்பிலை, கரம் மசாலா பவுடர் தூவி, இறக்கி வைத்துக் கொள்ளவும். காய்கறி சூடு ஆறியதும் நூடுல்ஸின் முக்கால் பாகத்தினை வாணலியில் போட்டு நன்கு கலந்து வைத்துக் கொள்ளவும்.

இதையே ஸ்வீட்டாகவும் செய்யலாம். ஒரு தேங்காயைத் துருவி பால் எடுத்து அதில் சர்க்கரையைப் போட்டு சிறிது சூடாக்கி கால் பாக நூடுல்ஸை போட்டு எடுத்து வைக்கவும். இது சிக்கனமாகவும் வாய்க்கு ருசியாகவும் இருக்கும்.

ஆர். சுமதி,
ஆர்யபுரம்



ஏலக்காய் 3
சோடா உப்பு 2 சிட்டிகை

**செய்முறை:**

வாணலியில் கோதுமை மாவை இலேசாக வறுத்து எடுத்துக் கொண்டு நெய்யில் முந்திரிப் பருப்பை வறுத்து துண்டுகளாக்கிக் கொள்ள வேண்டும். வெல்லத் தூளில் 2 கப் நீர் விட்டு அடுப்பில் கரையவிட்டுக் காய்ச்சி இறக்கி மண்ணில்லாமல் கோதுமை மாவில் கொட்டிக் கிளறி அத்துடன் பொட்டுக் கடலை மாவு, தேங்காய்த் துருவல் அவல், மசித்த வாழைப்பழம் இவைகளையும் பிசைந்து பால் சேர்த்து இட்லி மாவுப் பதத்தில் கரைத்துக் கொண்டு (தேவையான நீர் சேர்த்துக் கொள்ளவும்.) முந்திரிப் பருப்பு, சுக்குத் தூள், ஏலக்காய்த் தூள், சிறிது சோடா உப்புச் சேர்த்து நன்றாகப் பிசைந்து அப்படியே அரை மணி நேரம் வைத்திருக்க வேண்டும். பின் குழி வாணலியில் 2 ஸ்பூன் நெய் விட்டு காய்ந்ததும் ஒரு கரண்டி மாவை ஊற்றி மூடிவைத்து மூன்று நிமிடங்களுக்குப் பின் திருப்பிப் போட்டு வெந்ததும் எடுத்து வைக்க வேண்டும்.

திருமதி பிரேமிளா,
திருச்சி-8

மூன்றாம் பரிசு: கடிகாரம்

## உப்பப்பம்

**தேவையான பொருட்கள்:**

கோதுமை மாவு 4 கப்
பொட்டுக்கடலை மாவு ஒரு கப்
இலேசான அவல் ஒரு மே. கரண்டி

தேங்காய்த் துருவல் ஒரு கப்
கனிந்த பெரிய ரஸ்தாளி வாழைப்பழம் 1
முந்திரிப் பருப்பு 4
பால் ஒரு கப்
வெல்லத் தூள் இரண்டரை கப்
சுக்கு 2 செ. மீ.

ஆறுதல் பரிசு: டால்டா டப்பா

## கோதுமை பொருள் விளங்கா உருண்டை

**தேவையான பொருள்கள்**

தீட்டிய கோதுமை, பாசிப் பருப்பு,
புழுங்கல் அரிசி, கடலைப் பருப்பு,
ஒவ்வொன்றும் கால் கிலோ

வெல்லம் ஒரு கிலோ
நிலக்கடலை 100 கிராம்
பொட்டுக் கடலை 100 கிராம்
ஏலக்காய் 6
தேங்காய் ஒரு மூடி



**செய்முறை:**

அடுப்பில் வாணலியை வைத்து அதில் தீட்டிய கோதுமை, பாசிப்பருப்பு, புழுங்கல் அரிசி, கடலைப்பருப்பு. இவைகளைத் தனித் தனியாகச் சிவப்பாகும்வரை வறுத்தெடுத்து எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து மிஷினிலோ அல்லது மிக்ஸியிலோ கொடுத்து நன்றாக நைஸாக அரைத்து எடுத்துக்கொள்ளவும். ஏலக்காயை பொடிப் பொடியாக நறுக்கி எடுத்துக் கொள்ள வேண்டும்.

அடுப்பில் வாய் அகன்ற பாத்திரத்தை வைத்து வெல்லத்தை உடைத்து அதில் போடவும். வெல்லம் கரையும் அளவுக்கு நீர் விடவும். நறுக்கிய தேங்காயையும் அதில் போடவும். பாகு நன்றாகக் கொதித்தவுடன் சிறிது தண்ணீரில் பாகைப் போட்டுப் பார்க்கவும். பாகு நீரில் கரையாமல், பாத்திரத்தில் ஒட்டாமல், தக்காளிப் பதத்தில் இருக்க வேண்டும். பாகு பதம் வந்தவுடன் கீழே இறக்கி வைத்து மாவுக் கலவையை அதில் போட வேண்டும். அத்துடன் ஏலக்காய்ப் பொடி, நிலக்கடலை, பொட்டுக் கடலை ஆகியவற்றையும் போட்டு நன்றாகக் கலக்கவும். பிறகு உருண்டைகளாகப் பிடிக்க வேண்டும். ஆறிய பிறகு உருண்டை கெட்டியாக இருக்கும். எத்தனை நாட்கள் ஆனாலும் உருண்டை கெடாது.

-ஜி. வி. சாந்தி,
ஈரோடு

**ஆறுதல் பரிசு:** டால்டா டப்பா

## 'பதுர் பேணி'

**தேவையான பொருட்கள் :**

கோதுமை மாவு கால் படி
ஜீனி கால் படி
டால்டா 100 கிராம்
எண்ணெய் தேவையான அளவு (கடலை எண்ணெய் அல்லது நல்லெண்ணெய்)

**செய்முறை:**

ஜீனியை நன்றாக இடித்துச் சலித்து மாவாக்கிக்கொள்ளவும். இந்த ஜீனி மாவில் பாதியை வாய் அகன்ற பாத்திரத்தில் வைத்துக் கொள்ளவும். பின்பு கோதுமை மாவு, மீதியுள்ள பாதி ஜீனி, இவற்றுடன் டால்டா சேர்த்து மூன்றையும் நன்கு அழுத்தும் பிசைய வேண்டும். (எவ்வளவு அழுத்தும் பிசைகிறோமோ அவ்வளவு ருசியாக இருக்கும்) பின்பு அதைச் சிறு சிறு உருண்டைகளாக உருட்டி வைத்துக் கொள்ளவும். வாணலியில் எண்ணெய் விட்டு இந்தச் சிறு உருண்டையை இரண்டு உள்ளங்கைக்கு உள்ளும் நடுவில் வைத்து லேசாக அழுத்த



வேண்டும். (அவ்வாறு செய்தால் நடுவில் சிறிது மேடாகவும் சுற்றிலும் சப்பையாகவும் தோன்றும்.) இதனை நான்கு நான்காக எண்ணெயில் போட்டு இருபுறமும் லேசாக சிவந்தவுடன் எடுத்து, தனியாகப் பாத்திரத்தில் வைத்திருக்கும் ஜீனி மாவில் இரண்டு பக்கத்தையும் புரட்டி எடுத்து மூடி உள்ள பாத்திரத்தில் போட்டு வைக்கவும். மறு நாள் இதை எடுத்துப் பார்த்தால் மேலே உள்ள மாவு அழகாகப் பூத்திருக்கும். இந்த அழகான, சுவையான 'பதுர்பேணி'யைப் பார்க்கும்போது இதைச் செய்வது மிகக் கடினம் என்று தோன்றும். ஆனால் மிகச் சுவையான, நீண்ட நாள் கெடாத பலகாரம் இது.

-மனோரஞ்சனி மணி,
மதுரை

அனைத்து சாலைகளும் அஞ்சலகத்தை நோக்கியே!



# உங்கள் பணத்தை 6 ஆண்டுகளில் இரட்டிப்பாக்குங்கள்

## தேசீய சேமிப்புப் பத்திரம்

6-வது வெளியீட்டில் முதலீடு செய்யுங்கள்

ஒவ்வொரு ரூ.100/-ம் ரூ.201-50 ஆக பெருகுகிறது

உங்கள் பணத்திற்கு நல்ல வட்டியும் பாதுகாப்பும் அளிக்கிறது.
இப்பத்திரம் ரூ-10, 50, 100, 500, 1000, 5000 மதிப்பில் கிடைக்கும்.
முதலுக்கும், வட்டிக்கும் வருமான வரி சலுகை உண்டு!

அயல் நாட்டில் வாழும் இந்தியர்களுக்கு 13% வட்டி அளிக்கிறோம்!



தொடர்பு கொள்க:
இயக்குநர்.
**சிறு சேமிப்புத் துறை,**
143, அண்ணா சாலை, சென்னை-600 002
அல்லது அருகிலுள்ள அஞ்சலகங்கள்

DIPR-509 83 EP

# பெண்ணே இது உன் வாழ்க்கை




உஷா சுப்ரமண்யம்

ஆதாமும், ஏவாளும் தோன்றிய நாள் முதலே உலகில் ஆணும், பெண்ணும் உள்ளனர். ஆண் வேட்டையாடி வந்தான். பெண் அடுப்பு மூட்டிப் பக்குவம் செய்தாள். ஆண் நாட்டை ஆண்டால் பெண் வீட்டில் அடங்கி இருந்தாள். ஒவ்வொருவருக்கும் அவரவர் வேலை நிர்ணயமாக இருந்தது. சமுதாயம் குழப்பமின்றி சென்றது. பெண் இன்று புதிதாய்த் தோன்றியவளல்ல. ஆனாலும் அவளைப் பற்றிய பிரச்சினைகள் புதிதாகத் தோன்றி உள்ளன. ஏன் இந்த நிலை?

ஆண் ஆதிக்கம் செய்பவனாகவும், பெண் அடங்கிப் போகிறவளாகவும் ஒப்புக் கொண்டு இருந்தவரை பிரச்சினைகள் இல்லை. என் கொள்ளுப்பாட்டி அவர் காலத் தாம்பத்தியத்தைச் சொல்லுவார். "இட்லி சரியாக அமைய வேண்டுமென்றால் அரிசியை கர,கரவென அரைத்துப் போட வேண்டும். உளுந்தை பந்தாக நெகிழ, நெகிழ அரைத்து கலக்க வேண்டும். அதட்டத் தெரிந்த புருஷனும், வளையத்தெரிந்த பெண்டாட்டியும், கொண்டாடினக் குடும்பம்" என இட்லி குறிப்பு, குடும்பத்துக்கு காவிய நயத்துடன் பொருந்தினாலும் அதட்டிக் கொண்டே இருக்கும் புருஷனுடன் வளைந்துகொண்டே இருக்க இன்றைய பெண்கள் தயாராக இல்லை. கல்வி என்னும் புது மருந்து அவர்கள் கூனிய முதுகுகளை நிமிர்த்தத் தொடங்கி விட்டது.

இந்தப் புதுமருந்தும், புதுப் போஷாக்கும் உண்மையில் பெண்களிடம் எதிர்பார்த்த மாறுதல்களை உண்டாக்கி உள்ளனவா என்ற கேள்விக்கு நாம் வெட்கப்படாமல் விடை தேடியாக வேண்டும். நாகரிகம், பண்பு, கல்வி என்ற பெயரால் பல பெண்கள் இன்று பழமைக்கும், புதுமைக்கும் இடையே ஒரு திரிசங்கு சொர்க்கத்தில் தொங்கிக் கொண்டிருக்கிறார்கள் என்பது என் கருத்து. இன்னும் சிலருக்கோ சுதந்திரம் வேண்டும், ஆனால் அதைக் கூட ஆண்கள் தேடி வாங்கித் தரவேண்டும். பெண்ணடிமைத்தனம் பற்றி வாய் கிழியப் பேசும் பலருக்கோ, அதை மாற்றச் சிறுமுயற்சி எடுத்துக் கொள்ளக்கூட சோம்பேறித்தனம்.

பெரிய நகரங்களில் நாகரிகமானவர்களாகக் கருதப்படும், அடிக்கடி ஆங்கிலப் பத்திரிகைகளின் சமூகக் காலங்களில் தலை காட்டும் சில நங்கைகளுடன் அவர்களுடைய க்ளப்பிற்குச் செல்லும் வாய்ப்பு கிடைத்தது. புகையை சுவாரசியமாக இழுத்து ஊதியபடி, அடிக்கடி பீரையோ செவன் 'அப்'பையோ உறிஞ்சியபடி, நாள் முழுவதும் 'டோக்கன்' வைத்து சீட்டு விளையாடிக் கொண்டிருந்த நுனி நாக்கு ஆங்கிலம் பேசிய இந்தத் தமிழ்ப் பெண்மணிகள் பேச்சில் காதில் விழுந்த சில: "எங்க வேலைக்காரிக்கு கலியாணம் நிச்சயம் செஞ்சு வச்சிருந்தாங்க. இவ நின்னு போயிட்டா என்ன செய்வதுன்னு கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன், நல்ல வேளை கலியாணம் நின்னுப் போச்சு!" என்று அருவருப்பான முறையில் வம்படிக்கும், நேரத்தை சீட்டிலும், மாஜாங் ஆட்டத்திலும் விரயம் செய்யும் இந்தப் பெண்மணிகள் தான் நம் சமூகத்தில் "கல்சர்ட்" என்று கருதப்படுகிறார்கள். பணம் மட்டுமே இவர்கள் நாகரிகத்தின் அளவுகோலாக உள்ளது.

சென்னையில் மேல்மட்டப் பெண்கள் வீடுகளில் நடக்கும் 'கிட்டி பார்ட்டி'களுக்குச் சென்றிருக்கிறீர்களா? செயற்கையான கர்வத்துடன், விதவிதமான பேஷன்களில் நடக்கும் இந்தப் 'பூனைப் பார்ட்டி'களின் முடிவில் மேஜையில் சமையற்காரர்கள் சமைத்த உணவு கூடை, கூடையாக வீணாகிக் கிடக்கும். ஆளுக்கு முன்னூறு, அல்லது நானூறு ரூபாய் 'கிட்டி பாகில்' போட்டு ஒரு புடவை அல்லது ஏதாவது அழகியப் பொருள் எடுத்திருப்பார்கள். வீடு திரும்பும் போது அனைவர் மனத்திலும் கசப்பு மட்டும் மிஞ்சி இருக்கும்.

போதாததற்குப் பெண்களுக்கான 'காக்டெய்ல் சர்க்கிள்ஸ்' நல்லவேளை, இந்த நாகரீகம் இன்னும் பூனைப்பார்ட்டிகளளவு தமிழ்ப் பெண்களிடையே வேகமாக வளரவில்லை. மது யாருக்குமே தேவையில்லாத ஒன்று. 'ஆணுக்குப் பெண் சமம்' என்ற கோட்பாட்டைப் பெண்கள் மது உறிஞ்சுவதிலா காண்பிக்க வேண்டும்? கோவை போன்ற சிறிய நகரங்களில் கூடச் சமுதாய ஏணியில் ஏறவேண்டும், தன்னைப் பிறர்பாஷனபிள் என்று எண்ண வேண்டும் என்பதற்காகக் கஷ்டப்பட்டுப் பெண்கள் 'ஸ்காட்ச்' சாப்பிட முயலும் போது, நான் அவர்களுக்காக மிகவும் வருந்துகிறேன்.

நான் பம்பாயிலிருந்து லண்டன் செல்லும் போது விமானத்தில் என்னருகில் இரண்டு இந்திய மாதர்கள் அமர்ந்திருந்தனர். மேனாட்டினர் போல் உடையணிந்திருந்த இவர்கள், புடவையணிந்திருந்த என் 'ஹலோ'விற்குக் கூடப் பதில் கூறாமல், என் தோற்றத்தைப் பார்த்துக் கேலியாகச் சிரித்தனர். ''ஸ்காட்சும், செவன் அப்பும்,'' ஆர்டர் செய்தனர். இரவில் உரத்த குரலில் பேசிச் சிரித்துக் கொண்டு, பிறரைத் தூங்க விடாமல் அனைவர் கவனத்தையும் கவர முயற்சித்துக் கொண்டிருந்தார்கள். என் அருகில் அமர்ந்திருந்த ஆங்கிலேயர் தன் மனைவியிடம் கூறியது என் காதில் விழுந்தது. ''இந்தப் பெண்கள் மேல்நாட்டுப் பெண்களிடமிருந்து ஒரு நல்ல பண்புகளைக் கற்றாலென்ன?'' என்று இவர் கூறியது முற்றும் உண்மை. நாம் மேல்நாட்டுப்பெண்களின் பண்புகளைக் கற்காமல், தும்பைவிட்டுத் வாலைப் பிடிப்பது போல் தோற்றப்பிரமையிலேயே ஆழ்ந்திருக்கிறோம் என்று எனக்குத் தோன்றுகிறது. கல்லூரிப் பெண்களிடம் இந்தத் தவறான மேல்நாட்டு மோகம் விரைவாகப் பரவி வருகிறது. இந்தப் பிரமை நம் சுய சிந்தனையை மிகவும் மழுங்கச் செய்து விடுகிறது. குறிப்பாகப் பண வசதி பெற்ற பெண்கள் இதில் பலி ஆடுகளாக விழுந்து கொண்டிருக்கிறார்கள்.



மேல்மட்டத்தில் சிலருக்கு இப்படி என்றால், நடுத்தர வர்க்கத்தில் சினிமா என்னும் போதை கறையானாகப் பெண்களின் வாழ்வை அரிக்கத் துவங்கியுள்ளது. சினிமா நல்ல பொழுதுபோக்கு. ஆனால் பொழுதுபோக்கே வாழ்க்கை முறையானால்... வீட்டு வேலைகளை அவசர அவசரமாக முடித்து, குழந்தையைக் கூட இடுப்பில் தூக்கிக் கொண்டு, அவதி, அவதியாகத் தியேட்டருக்கு ஓடி வாரத்திற்கு மூன்று சினிமா வாவது பார்த்து, சினிமா போகாத நாட்களில் சினிமாக் கதை பேசி, அல்லது அத்தனை சினிமா இதழ்களும் படித்து, நட்சத்திரங்களின் வாழ்வை அலசும் பெண்களில் பலர் பட்டதாரிகள் என்பதை என்னால் ஜீரணிக்கவே முடியவில்லை. பல பெண்கள் நடுத்தர வயதைத் தாண்டியவர்கள், ரசச்சொம்பை கடையில் போட்டுக் கூட சினிமா பார்க்கத் தயங்காதவர்கள். இந்த 'சொப்பன சஞ்



சாரிகள்' தங்கள் வேலைத்திறன் எவ்வளவு விரயமாகிறது என்று ஒரளவாவது சிந்தித்துப் பார்க்கலாம். இதே சர்ப்புடன் வளரும் இவர்கள் குழந்தைகளின் எதிர்காலமும் நிழலைத்தேடுவதில் தான் அமையுமா? சிந்தித்துப் பாருங்கள்.

பெண்களின் முன்னேற்றத்தில் மற்றொரு பிரம்மாண்டமான தடுப்புக்கோல் தங்கள் பெண்மையை உபயோகித்து வாழ்வில் முன்னேறும் பெண்கள். தமிழ்நாட்டில் மிகவும் பிரபலமான ஒரு பெண் என்னிடம் ஒருமுறை கூறினாள், ''ஆண் தன் உடல் பலத்தை உபயோகித்துக் காரியம்சாதித்துக் கொள்வது சரி என்றால், பெண் தன் பெண்மை கவர்ச்சியை உபயோகித்து முன்னேறுவதில் என்ன தவறு?'' என இத்தகைய எண்ணங்கள் உடைய பெண்கள் அறிவும், அழகும் சாதுர்யமும் பெற்றிருந்தால் வெகு வேகமாகப் பல துறைகளிலும் முன்னேறி விடுவது உண்மையே. ஆனால் அது உண்மையான முன்னேற்றமா? இதுதான் நம்

பெண்கள் சமூகத்தில் அடைய விரும்புவது என்றால், தேவதாசிச் சட்டத்தைக் கொண்டு வந்திருக்கவே வேண்டாம். நாகரிகப் போர்வையில் விபசாரம் பெண்ணினத்தின் கௌரவத்தை அடியோடு குழிபறித்து விடும். பெண்மை நமக்கு அளிக்கப்பட்டுள்ளசாதனமல்ல, நினைத்ததை அடைய, அதை உபயோகிக்க. பெண்மை நாம் ஏற்றுக் கொண்டுள்ள கௌரவமான போர்வை. அது நம் கம்பீரத்தை மட்டுமே நிலைநாட்ட வேண்டும்.

பெண்கள் பண்பு பெற, அவர்கள் கல்வி பெருக வேண்டும் பொருளாதார சுதந்திரம் பெற வேண்டும் என முன்பு எழுதினேன். ஆனால் சமீபத்தில் என் தோழி கூறியதைக் கேட்டதிலிருந்து கல்வியும், வேலையும் பெண்களுக்குப் பண்பை அளித்துள்ளதா என்ற வினாவே எழுகிறது. என்னுடன் பள்ளியில் படித்த இவர் வீட்டில் மூத்த பெண். அடுத்து மூளைவளராக இரு தம்பிகள், அவர்களைத் தொடர்ந்து நாலு குழந்தைகள். பட்டப்படிப்பு முடிந்தவுடன் வங்கியில் வேலை தேடிக் கொண்டு கடினமாக



உழைத்து முன்னேறியவர். எப்போதும் குடும்பப் பொறுப்பு. தனக்குத் திருமணம் செய்து கொள்ள முடியாத சுமைகள். சமீபத்தில் ரீஜனல் மானேஜராகப் பொறுப்பேற்று, ஒரு பெண்கள் வங்கிக்குத் தலைவியாகி, கார், டிரைவர் வசதியும் பெற்றுள்ளார்.

சென்ற வாரம் ஒருநாள் வேலைநேரத்தில் இவர் திடீரென மூர்ச்சையிட்டு விழுந்து விட்டார். முதற் சிகிச்சைக்குப் பிறகு வாந்தி, மயக்கமாக ஆபீஸிலேயே படுத்து விட்டார். டாக்டர் கட்டளைக்கிணங்க ஆஸ்பத்திரியில் நாலு நாள் அட்மிட் ஆகி 'செக்-அப்' செய்து கொண்டதில் இவருக்கு மிகவும் உயர் இரத்த அழுத்தம் இருப்பது தெரிந்தது. பல வேலைகளுக்கு நடுவில் இவர் தன்னைப் பற்றியோ, தன் உடல் நிலை பற்றியோ, இதுவரை எண்ணியதும் கவனித்துக் கொண்டதும் இல்லை. ஒரு வாரம் மருந்து, மாத்திரை சாப்பிட்டு ஆபீஸ் திரும்பினால் அங்கு ஏகப்பட்ட கசமுசா. இவருக்கு வாந்தி, மயக்கம், ஆஸ்பத்திரியில் அபார்ஷன் செய்து கொண்டு வந்துள்ளார் என வங்கியில் வேலை செய்யும் 'ஆபீஸர்' பெண்மணிகள் வம்பு கிளப்பி, மற்ற கிளைகளிலும் பரவி, இவருக்கு மிகப் பெரிய தலைகுனிவு ஏற்பட்டுள்ளது. அவமானம் தாங்காமல் விடுப்பு எடுத்து, மாற்றலுக்குக் காத்திருக்கும் இவர் என்னிடம் கூறினார். ''எம். ஏ., எம். காம்., எனப் படித்த பெண்கள் இப்படி மற்றொரு பெண்ணைப் பற்றி அபாண்டமாக, நாக்கூசாமல் வம்பு பேசினால், கல்வி அறிவில்லாதவர்கள் நிலை என்ன?'' என. அந்தக் காலப் பெண்களுக்கு வம்படிக்கச் சுதந்திரம் குறைவு இன்று நாம் பெற்றுள்ள சுதந்திரம் இப்படித்தானாகேலிக் குறியாகி பெண்ணினத்துக்கே அழிவளிக்க வேண்டும்?

வரதட்சிணையை எதிர்க்க வேண்டும், ஆண் பெண்ணை விலைபேசுவதைத் தடுக்கவேண்டும் எனப் பெண்கள் அனைவருமே பேசுகிறார்கள். ஆனால், காதல், கவிதைகளைப் படித்துக்கிறு கிறுப்படையும் காதற்காட்சிகளை ரசிக்கும் பெண்கள் கூட, ஆபீஸில் அல்லது வெளி இடத்தில் ஒரு ஆணும், பெண்ணும் நின்று பேசினால் அதைப்பற்றி எவ்வளவு கேவலமாக வம்பளக்கிறார்கள்? ஆண், பெண் உறவுகள் அனைத்தையும் இந்தக் கோணத்திலிருந்தே பார்ப்பதும், பேசுவதும் பண்பட்ட பெண்களுக்கு அழகா? வம்படிப்பதும், பிறரை இழிவாகப் பேசுவதும் நம் சமுதாயத்தின் சாபக்கேடுகள். இந்த சாபம் இனியும் தொடர வேண்டுமா? பிறர் வீட்டில் செய்த சீர்வரிசை பற்றி பிரமிப்புடன் பேசுவது அவசியம்தானா? வீட்டு விஷயங்களை ஆபீஸில் உணவு இடைவேளையில் அளந்து கொட்டுவதால் யாருக்கு லாபம்? இந்தச் செயல்கள் பெண்மையின் மதிப்பை மிகவும் குறைப்பதாய் உள்ளன.

பாரத நாட்டுப் பெண்களின் அடிப்படை நற்குணங்களைப் பற்றி நிறையவே எழுதினேன். அவர்கள் வாழ்வு முன்னேற வேண்டும், அவர்கள் வஞ்சிக்கப்படக்கூடாது என அவர்கள் தற்காத்துக் கொள்ளவேண்டிய முறைகளைக் கூறினேன். குணம் மட்டும் கூறிக் குறை மறைப்பதும் நம் சுகத்துக்கு நல்லதல்ல. எனவே நம் குறைகளையும் புரிந்து கொண்டு, அவை களைய முற்பட வேண்டும் என விழைகிறேன். பெண்மை ஒரு சமுதாயத்தில் போற்றப்பட வேண்டுமானால், அவள் போற்றுதலுக்குத் தக்கவளாகத் தன்னை மாற்றிக் கொள்ளவேண்டும். அவள் சுயமதிப்பு நிலைபெற வேண்டும்.

(முற்றும்)

MASALA SUPARI

ASOKA NUTS

PLAIN

ASOKA

BETEL NUT POWDER

# யாவரும் விரும்புவது

# அசோகா

## சுகந்த பாக்கு

**AVAILABLE IN**

200 GRAMS
100 GRAMS
50 GRAMS
20 GRAMS

Packs and also in minis.

5 Ps

INTIMATE

10 Ps




Mfgrs :

ASOKA BETELNUT CO. (PVT) LTD.,
COIMBATORE - 641 018.

CHARI

---

## பாத்திரங்கள் பளபளக்க

# ஷப்ஞ

## க்ளீனிங் பவுடர்

Shaina

எவர்சில்வர்

பித்தளை,

அலுமினியம்

போன்ற எல்லா உலோக பாத்திரங்கள் மற்றும் மொசைக் தரைகள், வாஷ் பேசின்கள் முதலியவற்றிலுள்ள கரி, கசடு, எண்ணைப் பசை போன்ற கடுமையான அழுக்குகளை நீக்கி பிரகாசிக்க வைக்கிறது. உயர்தரத்தின் சின்னமான ஷப்ஞ வேகமாக விற்பனையாகிறது.

Mfrs : **ASWINI CHEMICALS**
13-A, East Street, Komarasamypatti,
SALEM - 636 007

சென்னையிலும், தமிழகத்தின் பிற பகுதிகளிலும், வட மாநிலங்களிலும் ஏஜென்சி இல்லாத பகுதிகளுக்கு ஏஜென்சி தேவை.

AGENTS WANTED FOR SRILANKA ALSO

மகிழ்வின்
உச்சகட்டத்திலிருக்கும்
இப்புது மணத் தம்பதிகள்
போன்று நீங்களும்
இருக்கலாமே ...




கொள்ளையின்பம் ... பாதுகாப்பு. அத்துடன் விரும்பும் வரையில் குழந்தை பெறுவதை ஒத்திப்போடலாம்

நிரோத்—நம்பகமான, இடைஞ்சலற்ற கருத்தடைச் சாதனம். அரசு உதவியினால், மிகக் குறைந்த விலையுடையது.

இப்போது புதுவித பொட்டலத்தில் கிடைக்கிறது.

நிரோத் உபயோகித்து,
மகிழ்ச்சி நிறைந்த கவலையற்ற மண வாழ்வு வாழுங்கள்

davp 82/181

விநியோகஸ்தர்கள்: ப்ரூக் பாண்ட், லிப்டன், ஹிந்துஸ்தான் லீவர், ஐ.டி.சி., டாடா ஆயில் மில்ஸ், யூனியன் கார்பைட், இதயிசல்,
*ஸ்மித் ஸ்டேன்ஸ்ட்ரீட், இந்தியன் ஆயில் கார்ப்பொரேஷன், பாரத் பெட்ரோலியம், தாசன் மாட்ச் இன்டஸ்ட்ரீஸ்



# மாமியார் வழியில் மருமகள்!

"மாமியார் உடைத்தால் மண் குடம், மாட்டுப் பெண் உடைத்தால் பொன் குடம்", "மாமியார் மெச்சிய மருமகள் இல்லை" — இப்படி மாமியார்-மருமகள் சண்டை பற்றி எத்தனையோ பழமொழிகள் உலகப் புகழ் பெற்று வருகின்றன. இந்த நாளிலே மாமியாரும் மருமகளும் ஒற்றுமையோடு இருப்பதோடு மட்டுமின்றி இருவரும் ஒன்றாகச் சமூக சேவையில் ஈடுபடுவது என்பது நம்ப முடியாத — நடக்க முடியாத ஒன்று. இந்த அதிசயத்தைப் பார்க்க வேண்டுமென்றால் திருமதி சரசா ராமானுஜன் அவர்கள் வீட்டிற்குப் போக வேண்டும்.

அந்த வீட்டு மருமகளாக திருமதி சரசா அடியெடுத்து வைத்தபோது ஒரு ஸ்டெனோ டைப்பிஸ்டாக இருந்த அவர் கணவர் பெரிய தொழிற்சாலை ஒன்றை ஆரம்பிக்கப் போகிறார் என்றோ, 8000 ரூபாய் முதலீட்டில் ஆரம்பித்த சின்னத் தொழிற்சாலை இருபத்தைந்து ஆண்டுகளில் 40 கோடி ரூபாய் பெறுமானமுள்ள விஜயா டாங்க்ஸ் என்ற கம்பெனியாக வளர்ச்சி பெறும் என்றோ கொஞ்சம்கூட எதிர்பார்க்கவில்லை.

அதே போல் தன் வளர்ச்சிக்கேற்ப தானமும் வளர வேண்டும், அள்ளிக் கொடுத்தால் ஆண்டவன் கொடுப்பார் என்ற கணவரின் குறிக்கோளுக்கும் அவர் குறுக்கே நிற்கவில்லை. பல தர்ம ஸ்தாபனங்களை நிறுவி, ஏழைகளின் கல்வி, தொழில் வளர்ச்சிக்கு திரு ராமானுஜன் பாடுபட்டபோது அவருக்கு ஏற்ற வாழ்க்கைத் துணைவியாக ஒத்துழைத்தார் திருமதி சரசா.

அதோடு நிற்காமல், பல ஏழைப்-பெண்கள் நாதியற்று கைதூக்கி விட ஆளின்றிச் சமுதாயத்தில் தவிப்பதை கண்டபோது கணவர் தந்த ஊக்கத்தில் "லக்ஷ்மி நாராயண மஹிளா சமிதி"யை ஆரம்பித்தார். செம்பூர் அஹோபில மடத்தின் ஸ்டோர் ரூமில் ஆரம்பித்த சமிதிக்கு இவர்களே ஒரு கட்டிடத்தையும் வாங்கி நன்கொடையாக அளித்தனர்.

இன்று செம்பூர் ப்ளூ டயமண்ட்ஸ் அபார்ட்மெண்டில் 150 அங்கத்தினர்களுடன் அமோகமாகச் செயல்பட்டு வருகிறது. ஜாதி மத வேறுபாடின்றி அனாதைப் பெண்களுக்கு ஆதரவு அளிக்



கின்றனர். அங்கத்தினர் அனைவரும் போட்டி போட்டுக் கொண்டு ஒற்றுமையாக பல சமூக நல காரியங்களைச் செய்கின்றனர். சாம்பார்ப் பொடி, ரசப் பொடி, ஊறுகாய், மாவரைக்கும் இயந்திரம், தீபாவளி காலத்தில் பட்சணங்கள் செய்து கொடுத்தல், பாட்டு வகுப்பு, தையல் வகுப்பு, இப்படி சமிதி செய்யாத காரியமே இல்லை. நல்ல தரமான பொருட்களைத் தயாரித்தளிக்கின்ற காரணத்தால் சமிதியில் தயாரான பொருள் என்றால், செய்வதற்கு முன் விற்றுப் போய்விடுகின்றன.

இவ்வாறு கிடைக்கும் வரும்படியில் அனாதைப் பெண்களுக்கு உதவுவதோடு மட்டுமின்றி, செம்பூர் சரஸ்வதி வித்யாலயாவில் பயிலும் மாணவிகளில் ஏழையான, ஆனால் புத்திசாலியான பத்து மாணவிகளுக்கு ஸ்காலர்ஷிப்பும் வழங்குகிறார்கள்.

கணவன் காட்டிய வழியில் சமூக சேவை மனைவி செய்வதில் அத்தனை வியப்பில்லை. மாமியாரைப் பின்பற்றி வீட்டுக்கு வந்த மருமகளும் முகம் சுணங்காததோடு மனம் விரும்பி சமூக சேவையில் ஈடுபடுவது என்பது வியப்பான நிகழ்ச்சிதான். திருமதி பிரேமா ராகவன் திருமதி சரசா வீட்டுக்கு மருமகளாக வந்தபோது, தொழிற் சட்டம் பயின்று, கணவருடைய தொழிலுக்குத் துணையாக இருக்க வேண்டும் என்ற எண்ணத்தோடுதான் வந்தார். ஆயின் வீட்டில் எல்லோரும் செய்து வந்த சமூக சேவை ஆர்வம் அவரையும் பற்றிக் கொண்டது. அதற்கேற்றாற்போல் மன வளர்ச்சி யடையாத ஒரு மைத்துனரும் அவருக்கு இருந்தார். அவரைப் பார்த்த மாத்திரத்திலேயே பிரேமா, மன வளர்ச்சி அடையாதவர்களுக்காக தன்னை அர்ப்பணித்துக்கொள்ளத் தீர்மானித்துவிட்டார். மாமியாரும் கணவரும் அதற்குத் துணையாக நின்று ஊக்கம் அளித்தார்கள். எஸ். என். டி. டி. பல்கலைக் கழகத்தில் சேர்ந்து, மன வளர்ச்சி உடல் வளர்ச்சி குன்றியவர்களைப் பற்றிப் படித்து அவர்களுக்குப் பயிற்சி அளிப்பதில் தேர்ச்சி பெற்று இன்று ஸோபையா கல்லூரியில் இயங்கிவரும் சாதனா ஸ்கூலில் மன வளர்ச்சி குன்றியவர்களுக்கு இலவசமாகப் பயிற்சி அளித்து வருகிறார்.

உடல் ஊனமுற்றோர்களுக்குப் பல சலுகைகள் இருக்கும் நம் நாட்டில் மன வளர்ச்சி இல்லாதோருக்கு அத்தகைய சலுகைகள் இல்லாததைச் சுட்டிக் காட்டினார். ரயில் கட்டணச் சலுகை, வேலை வாய்ப்பளித்தல் மன வளர்ச்சி இல்லாதவர்கள் பற்றிய சமுதாய விழிப்புணர்ச்சியைத் தூண்டுவதற்காக ஒளியும் ஒலியும் நிகழ்ச்சியைத் தயாரித்து அளித்தல், இப்படிப் பல திட்டங்களை உருவாக்கி அவற்றைச் செயல்படுத்தியும் வருகிறார். அவற்றில் தலையாயது... இப்படிப்பட்ட குழந்தைகளுக்காக ஒரு டிரஸ்ட் ஆரம்பித்து நிதி திரட்டுவது. பெற்றோர்களுக்குப் பிறகு, இத்தகைய மன வளர்ச்சி குன்றிய குழந்தைகளுக்கு ஆதரவின்றிப் போய்விடக் கூடாதே என்பதற்காக, அவர்களைப் பார்த்துக் கொள்பவர்களுக்குப் பொருளுதவி செய்வதோடு, அவ்வாறு வழங்கப்படும் பணம் சரிவரச் செலவிடப் படுகிறதா என்பதைக் கவனித்துக் கொள்ள ஒரு சமூக நல ஊழியரை நியமிப்பது— ஆகியவை இந்த டிரஸ்டின் குறிக்கோளாகும். இப்போது திருமதி பிரேமா மன வளர்ச்சி குன்றிய இரு அனாதைக் குழந்தைகளுக்கு பூரண பொறுப்பேற்றிருக்கிறார்.

நல்ல தொழில், வருவாய், கண் நிறைந்த கணவர், மணியான குழந்தைகள் எல்லாம் இருக்க எப்படி எப்படியோ இருக்கலாம். நாளொரு சினிமா, டிராமா, கச்சேரி பார்ட்டி என்று பொழுதை எப்படி எப்படியோ கழிக்கலாம். ஆயினும் வீட்டில் மாமியார், மாமனார், மருமகள் எல்லோருமே போட்டி போட்டுக் கொண்டு வெவ்வேறு துறையில் சமூக சேவையில் ஈடுபட்டிருப்பது இவர்கள் வீட்டில் தான். தங்கள் தொழில் வளர உதவிய சமுதாயத்துக்குத் தங்களாலானதை செய்ய வேண்டும் என்பதே இவர்கள் குறிக்கோளாக இருக்கிறது.

— ராஜம் ராஜாமணி

தீப்புண்ணுக்கு செங்கல்லை அரைத்து பொங்கிய இடத்தில் தடவினால் 15 நிமிஷத்தில் எரிச்சல் அடங்கி விடும்.

- தனலட்சுமி




# 'V' கழுத்து ரவிக்கை.

பாடி

மாதிரிக்காக இங்கு எடுத்துக்கொள்ளப் பட்டுள்ள 16 வயது பெண்ணின் ரவிக்கை தைக்க சுமாராக 75 செ. மீ. துணி தேவைப் படும். டீ பை டீ. லான், ஆர்கண்டி போன்ற துணிகள் ஏற்றவை.

அளவுகள்:–

பாடி:–

0 to 1–14'' (முழு உயரம்)

0 to 3–4'' (¼ மார்பளவில் பாதி)

0 to 2– $\frac{32}{4}$ = 8 (¼ மார்பளவு)

3 to 3–1'' (கழுத்து இறக்கத்திற்காக)

0 to 5–2'' (கழுத்து அளவு)

5 to 6–3½'' (தோள் பட்டை)

6 to 6''–½'' (தோள்பட்டை இறக்கம்)

7 –2–வது கட்டத்தின் மத்தியபுள்ளி

8 to 7''–1'' (இடுப்பின் ஷேப்புக்காக)

0 to 5''–½'' (பின் கழுத்து)

1 to 1''–4'' (யோக் நீளம்)

8 to 8''–2½''

கை:–

0 to 1, 2to3–6'' (கைநீளம்)

0 to 2, 1to3–13'' (கை அகலம்)

4– அகலத்தின் சரிபாதி புள்ளி.

5–2–வது கட்டத்தின் மத்திய புள்ளி

## பேப்பர் மாதிரியை வரையும் முறை

தேவையான அளவுப்படி ரவிக்கையின் நீளத்தை அளந்து குறித்துக் கொள்ளவும். மார்பு சுற்றளவை அளந்து அத்துடன் தூரலூஸுக்காக 4'' சேர்த்து குறித்துக் கொள்ளவும். கையின் நீள, அகலங்களை அளந்து கொள்ளவும். மேற்கண்ட அளவுகளைக் குறித்துக் கொண்டபின் ஒரு பழைய செய்தித் தாளில் மாதிரியை வரையவும்.

முதலில் உயரத்தை குறித்துக் கொள்ளவும் (14'') பின்னர் பாடியின் முன், பின் பாகங்களை (0to1) சேர்த்து கட்டமாக வரைந்து கொள்ளவும். மார்பின் கால்பாகத்தை மார்க் செய்து (0to2) அதை இருசம கட்டங்களாகப் பிரித்து வரைந்துகொள்ளவும். கழுத்தின் அகலத்தை மார்க் செய்யவும். (0to5) முன்கழுத்து (5to3' –ஐ இணைக்கவும்.) பின்கழுத்து (5to5' இணைக்க) படத்திலுள்ளது போன்று வரையவும். தோள்பட்டையில் ½'' மார்க் செய்து படத்திலுள்ளது போன்று சாய்வாக வரைய முன், பின்புற பாடியின் மத்தியில் (4) 2–வது கட்டத்தின் சரிபாதியில் (7) மார்க் செய்யவும். 4to7'–ஐ இணைக்கவும். இடுப்புப் பகுதியின் ஷேப்புக்காக 7'–லிருந்து இருபுறமும் 1'' மார்க் செய்து 7to8 புள்ளிகளை இணைத்து படத்திலுள்ளது போன்று ஷேப்பை உருவாக்கவும். 6to7–ஐ முன்புறம், பின்புறம் ஆகியவற்றில் வளைவாக இணைத்து ஆம்ஹோலை உருவாக்கவும். முன்புறஆம்ஹோலில் மட்டும் படத்திலுள்ள போன்று ஷேப் (Shape) வரைந்து கொள்ளவும். முன்புறபாடியின் கீழ்ப்புறத்தில்யோக்கை படத்தில் காட்டியுள்ளவாறு 1to1–ஐ 4''–ம், 8to8'–ஐ 2½''–ம் மார்க் செய்து வரைந்து கொள்ளவும்.

கை:– கையின் நீளத்தையும் (0to1; 2to3) அகலத்தையும் (0to2, 1to3) குறித்துக் கொண்டு அதை படத்திலுள்ளது போன்று 3 சம கட்டங்களாகப் பிரித்துக்

தையல் – லலிதாகணபதிராமன்

யோக்கை பாடியுடன் இணைத்தல்

கை

தைத்தபின் உடை

கொள்ளவும். அகலத்தில் மத்திய புள்ளியை (4) வரைந்து கொள்ளவும். 3 பாகங்களுக்குள் நடுபாகத்தின் மத்தியில் மார்க்செய்து (5) மத்திய புள்ளியுடன் படத்திலுள்ளது போன்று இணைத்து (5to4) கை ஷேப்பை வரைந்து கொள்ளவும். பின்னர்... என்ற கோடிட்ட பகுதி வழியே பாடி, கை ஆகியவற்றை தனித்தனியே வெட்டி எடுத்துக் கொள்ளவும்.

பேப்பர் மாதிரியை துணியில் வைத்து வெட்டும் முறை:—

முதலில் துணியின் கரைப்பகுதி உயர வாக்கில் அமையுமாறு பின் புறபாடியை வைத்து (2 ஆக மடித்து குண்டூசியால் பின்செய்து, தைப்பதற்கு எல்லா இடமும் ½–ம்''. இடுப்புப் பகுதியில் மட்டும் 1''–ம் விட்டு பென்சிலால் வரைந்து வெட்டி எடுத்துக் கொள்ளவும். முன்புற பாடி, 2 யோக் ஒரு பக்கத்திற்கு வீதம் 4 யோக் துண்டுகள். ஆகியவற்றையும் வெட்டி எடுத்துக் கொள்ளவும். 2 கைகளையும் எல்லா இடமும் ½''–ம் கீழ்ப்புறம் மடித்துத் தைக்கமட்டும் தேவையான அளவும் விட்டு வரைந்து வெட்டிக் கொள்ளவும்.

தைக்கும் முறை:— மீதமுள்ள துணியில் 2'', 1½'' அகலமும், ஒப்பன் அளவு நீளமுள்ள துண்டுகளை வெட்டி எடுத்துக் கொள்ளவும். முன்புற பாடியில் படத்திலுள்ளது போன்று 1''–லிருந்து 2½'' அகலத்தில் ¾'' dart–ஐ 1½'' நீளத்திற்கு தைக்கவும். அதற்கு மேலாக ஒபன்பகுதியிலிருந்தும், ஆம்ஹோல் பகுதியிலிருந்தும் ஒரு பாயின்ட் அகலத்திற்கு படத்திலுள்ளது போன்று dart போடவும். (3dart–களையும் இணைத்தால் அவை ஒரு புள்ளியில் இணையுமாறு அமைய வேண்டும்.) பின்னர் படத்திலுள்ளது போன்று யோக்கை பாடியுடன் சேர்த்து தைக்கவும். பிறகுபாடியை யோக்கினுள் நன்றாக சுருட்டி வைத்து யோக்கின் மறுபுறமும் தையல் போடவும். தைத்தபின் உள்ளிருக்கும் பாடி துணியை வெளியே இழுத்து நன்றாக நீவிவிடவும். இப்பொழுது யோக்கின்மேல், கீழ்ப்பாகங்களில் தையல் தைத்திருப்பது தெரியாது. வலதுபுறம் 1½'' பட்டியும், இடதுபுறம் 2'' பட்டியும் வைத்து தைக்கவும். தோள்பட்டை, பகுதியை இணைத்துதைத்து கொள்ளவும். பின்புற பாடியில் இடுப்பின் சாய்வான பகுதியிலிருந்து 3'' தள்ளி ½'' அகலத்திற்கு 2 dart இருபுறமும் தைக்கவும். 1½ அகலமுள்ள பட்டியை நல்லபக்கம் வைத்துத் தைத்துத் எதத்து கெட்ட பக்கம் திருப்பி ¼'' மடித்துத் தைக்கவும். பின்னர் முன், பின்புற பாடிகளை இடுப்பு பாகத்தில் இணைத்துத் தைத்துக் கொள்ளவும். கையின் கீழ்ப்புறம் துணி விட்டதற்கு ஏற்றவாறு பிடித்துத்தைக்கவும். ஆம்ஹோல் இணைப்புடன் கையை வைத்துப் பார்த்து தேவையான அளவுப்படி மார்க் செய்து கையை தனித்தனியே இணைத்துக் கொள்ளவும். பின்னர் பாடியின் நல்ல பக்கமும், கையின் நல்லபக்கமும் இணைந்திருக்குமாறு பொருத்திவைத்து முதலில் ஒட்டுத்தையல் தைத்துக் கொண்டு பின்னர் மிஷினால் தைக்கவும். ஒட்டுத் தையலை பிரித்து விடவும். 1'' அகலமுள்ள நீண்ட க்ராஸ்பீஸை கழுத்தின் நல்லபக்கம் வைத்துத் தைத்து கெட்டபக்கம் முழுவதுமாக திருப்பி ¼'' மடித்து ஹெம் செய்யவும் ஒபன் பகுதியில் 2''–க்கு ஒரு கொக்கிவீதம் வைத்துத் தைக்கவும்.

# சொல்ல விரும்புகிறோம்

இலவச இணைப்பு மிகவும் பயனுள்ளது. நீரிழிவு நோயைப் பற்றியும், சிகிச்சை பற்றியும் தற்காப்பு முறை பற்றியும் தெள்ளத் தெளிவாக இருந்தது. பத்திரப்படுத்தி வைத்துக்கொள்ள வேண்டிய பயனுள்ள இணைப்பு.
சென்னை-45 — கணபதி சுப்பிரமணியம்

பரிசு பெற்ற கட்டுரைகளும், திருமதி லட்சுமி ராஜரத்தினம் அவர்களின் அருமையான குறுநாவலும் என்னை மிகவும் கவர்ந்தன. திருமதி உஷா அவர்கள் தமது கட்டுரையில் எவ்வளவு விஷயங்களைத் தெளிவுபடுத்துகிறார்! பாராட்டுக்கள்.
திருச்சி — மா. தமிழ் சாந்தி

வெண்ணெயிலிருந்து கண்ணீர்: படித்ததும் நெஞ்சம் திக்கென்றது. ஏன் தெரியுமா? 1–7–83 அன்று காலைதான் முதன் முறையாக அக்கம் பக்கம் வழக்கமாகத் தரும் வெண்ணெய் வியாபாரியிடம் வாங்க வேண்டிய இக்கட்டான நிலையில் வாங்கி விட்டேன். காய்ச்சிய பிறகுதான் மனசு ஆறுதல் ஆச்சு. நல்லவேளை! நானும் ஏமாறலையே என மகிழ்ந்தேன்.
வியாசகர்நகர் — சிம்மவாஹினி

லட்சுமி ராஜரத்தினம் குறுநாவலைப் படித்ததிலிருந்து மனத்தின் பாதிப்புக்கள்: அடி ஆழத்தில் புதைந்த தடங்கள் — நிறைய நிறைய உண்டு சார்!
சென்னை-4 — மயிலை கோபி

மூளை வளர்ச்சியற்றவர்களுக்கும் முக்கியத்துவம் அளித்து விளக்கக் கட்டுரை வெளியிட்டது கண்டு பெருமைப்படுகிறேன். குறிப்பிட்ட எவரையும் மூளை வளர்ச்சியற்றவர்கள் எனப் பிரிப்பது பாவம்! ஒவ்வொரு மனிதனுமே (முழுமையாக) மூளை வளர்ச்சி பெறாதவன்தானே!
அந்தணப்பேட்டை — அண்ணா. அன்பழகன்

இரு மாதமாக வந்த 'பற்களைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள்'' பகுதி ஒரு பயனுள்ள பகுதியாகும்.
மே. மாம்பலம் — எஸ். மோகன்

''குறுகலான சாலையில் 'பரபரப்பான விபத்துக்கள்'' புரட்சிகரமான தலைப்பைக் கொண்ட, படித்த வாசகர்களை உணர்ச்சி வசப்படச் செய்த பெண் குலத்தின் அவலங்களை விளக்கிய குறுநாவல்.
சென்னை-5 — வி. ஞானவி

உஷா சுப்பிரமணியம் அவர்களின் கட்டுரையைத் தொடர்ந்து படிக்கும் ஆண் வாசகர்கள் கூடிய சீக்கிரம் தங்கள் மனத்தையே கிளறி எடுத்துத் தூரப் போட்டு விட்டு, அந்த இடத்தில் 'பெண் மனதைப்' பொருத்திக் கொண்டு விட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.
ஸ்ரீரங்கம் — ஆர். கோபாலன்




## அட்டையில்...

குமாரி பார்வதி பி.ஏ. பட்டதாரி ராயப்பேட்டை உட்லண்ட்ஸ் ஓட்டல் உரிமையாளர் பி.எம். நாராயணசாமி நாயுடு, கமலா நாராயணசாமி தம்பதியினரின் ஒரே செல்வமகள் இவர் இதுவரையிலும் நூறுக்கும் மேற்பட்ட நாட்டிய நிகழ்ச்சிகளை நடத்தியுள்ளார். நீதிபதி ராம பிரசாதராவ் கவர்னர் பட்வாரி அமைச்சர் ஆர். எம். வீரப்பன் போன்றவர்களால் பாராட்டப் பெற்றவர்.

வண்ணப்படம்: 'யோகா'

# படத்துடன் ஒரு கதாகாலட்சேபம்







● கதாகாலட்சேபம் செய்வதில் ஒவ்வொருவர் ஒவ்வொரு பாணியைப் பின்பற்றுவர். ஆனால் கதாகாலட்சேபத்தையே முற்றிலும் புதுமையான வடிவத்தில் நடத்திக்கொண்டும் -- அதன் மூலம் ஏராளமான ரசிகர்களையும் கவர்கிறார்கள் திரு. ஹரிஹர தாசன் –திருமதி பர்வதம் ஹரிஹர தாசன் தம்பதிகள்.

ஒரு புராணத்தைப் பற்றி விவரிக்கும் போது, விவரிக்கும் காட்சியை அப்படியே புரொஜக்டரில் ஸ்டில்லாகக் காட்டுகிறார் இவர். உடனே அந்தக் காட்சிக்குரிய கீர்த்தனையை அவர் மனைவி பாட.... இவர் அந்தக் காட்சியைப் பற்றி விவரிக்க.... அந்தக் காட்சியே அங்கு நடைபெறுவது போன்ற தன்மை நிலவுகிறது.

இதற்காக மிகவும் அலைந்து பல அரிய புகைப்படங்களைச் சேர்க்கிறார் ஹரிஹர தாசன்.

''அவற்றை அவுட்லைன் செய்து – அதற்கு டிசைன் போட்டு அதைப் புகைப்படம் எடுத்து – பிறகு அதில் திரும்பவும் டிசைன் எடுத்து''.... என்று ஒரு புகைப்படம் தயாரிக்க மிகக் கவனத்தோடு செய்ய வேண்டியுள்ளதைக் கூறுகிறார்.

இதுவரை பற்பல புராணக் கதைகளை பம்பாய் உள்பட பல நகரங்களில் நடத்தியுள்ள இவர், இந்து சமயக் கலைவிழாவில் நடத்தியே ஆக வேண்டும் என்று வெறியோடு தயாரித்தது ''காஞ்சி சங்கரரும்–காமகோடி பீடமும்'' புராண வடிவம் தான்!

ஆதிசங்கரரின் வாழ்க்கை வரலாற்றை சுமார் நூறு புகைப்படங்களுக்கு சினிமா பார்ப்பது போல் முதலில் காட்டுகிறார். வெறும் படங்களை மட்டும் புரொஜக்டரில் காட்டுவதோடு நிற்பதில்லை. கூடவே மற்றவர்கள் சொல்வது போல் விளக்கவுரைகள்–கீர்த்தனைகள் ஆகியவையும் உண்டு.

ஆதிசங்கரருக்குக் கிடைக்கப் பெற்ற ஐந்து சிவலிங்கங்களை முறையே... கேதாரம், பூரி, சிருங்கேரி, – சிதம்பரம், ஆகிய இடங்களில் நான்கு ஸ்படிக லிங்கங்களை நிறுவியவர் ஐந்தாவதை காஞ்சியில் நிறுவி காமகோடி பீடத்தை தோற்றுவித்ததாகவும் (இன்று அதை காஞ்சி சுவாமிகள் பூஜித்து வருகிறார்கள்.) கூறி ஆதி சங்கரரின் வாழ்க்கை வரலாற்றை முடிக்கிறார்கள்.

பின்பு காஞ்சியின் பெருமை.

சுமார் 105 கோயில்களைக் கொண்ட ஒரே நகரம் இந்தியாவில் காஞ்சிபுரம் தாம் என்பதை விளக்குகிறார். பிறகு காமகோடியின் முதலாவது பீடம் – இரண்டாவது பீடம் என்று இரண்டொருவரை அறிமுகப் படுத்துகிறார். பிறகு ஸ்ரீஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸ்வாமிகள் புராணம். ஆம்! அவர் சிறு வயதிலிருந்து அஞ்ஞானத்தை விட்டு மெய்ஞ்ஞானத்தைக் கொண்டது உட்பட அப்படியே அவர் வாழ்க்கை வரலாற்றை விளக்குகிறவர் – அடுத்தபடியாக ஸ்ரீஜெயேந்திர சரஸ்வதிகளின் வாழ்க்கை வரலாற்றையும் காட்டுகிறார். பிறகு அவரது சென்னை விஜயத்தில் சில இடங்களையும் காட்டுகிறார்.

இப்படி அந்தப் புராணம் சுமார் இரண்டு மணி நேரங்கள் நடக்கிறது.

''ஒவ்வொரு ஸ்டில்லும் எப்படியோ ஏதோ ஒரு பழைய புத்தகத்தில் இருந்து எனக்குக் கிடைக்கிறது – அது இறைவனின் பேரருள்தாம்'' என்று வியக்கும் இவரது இன்னொரு திருப்தி ''நிகழ்ச்சி நடத்துவதற்காகப் பெருங்கோயில்களுக்குச் செல்வதால் தெய்வ தரிசனங்கள் தமக்குக் கிட்டுகிறது'' என்பதுதான்!

இவ்வளவு கஷ்டப்பட்டு முயற்சியோடு தயாரித்தோம் என்பதற்காக அதிகமான தொகை இவர் கேட்பதில்லை. சில கோயில்களில் இலவசமாகக் கூடச் செய்திருக்கிறார்.

இவரது பெரும்பான்மையான புராணங்களுக்கு. கீர்த்தனைகள் முழுவதுமே இவரது துணைவியார் இயற்றி இசையமைப்பது தான்!

அதிலும் ஓர் விசேஷம் என்னவென்றால் சங்கீதம் முறையாகப் பயிலாத இவருக்கு அருவி போல் தாளத்தோடு கூடிய பாடல்கள் கொட்டுகிறது. இவருக்கே எப்படி இத்தனைப் பாடல்கள் உண்டாயிற்று என்ற மலைப்பு!

ஒளியர் கோபுலு. தமது புகைப்படங்களை அவுட்லைன் செய்து கொள்ள இலவசமாக அனுமதித்திருப்பதை நன்றியுடன் குறிப்பிடுகிறார்.

-வி. தியாகு

புகைப்படம் : கலை நாகராஜன்

# நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்



ஆரோக்கியம், மனிதனின் தலையாய தேவை. இதைக் கருதியே திட்டங்கள் வரைகையில், சுகாதாரம் குறித்த பணிகளின்பால் சிறப்புக் கவனம் செலுத்தப்பட்டு வந்துள்ளது.

- 2000ல் அனைவருக்கும் சுகாதார சேவை வசதிகளை அளிக்க திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது.
- நாட்டில், ஏற்கனவே ஏறக்குறைய ஒன்றரை லட்சம் சுகாதாரப் பராமரிப்பாளர் நியமிக்கப்பட்டுள்ளனர்; 55 ஆயிரத்துக்கும் அதிகமான துணை மற்றும் துவக்க சுகாதார நிலையங்கள் திறக்கப்பட்டுள்ளன.
- குழந்தைகளையும் பிரசவித்த பெண்களையும் எளிதில் நோய் பற்றுகிறது. எனவே, இவர்களுக்காக, ஒருங்கிணைந்த குழந்தை நல திட்டம் துவக்கப் பட்டுள்ளது. இத்திட்டம் பயன் தர துவக்கியிருக்கிறது.
- நெறிசலான, அசுத்தம் நிறைந்த சேரிகள், பல நோய்களுக்கு பிறப்பிடமாக விளங்குகின்றன. 1990 வாக்கில், 3 கோடி சேரி வாழ் மக்களுக்கு, 20 அம்ச திட்டத்தின்படி சுத்தமான சூழலளிக்கப்படும்.

**ஆரோக்கியமான மக்களே வலுவான சமூகத்தின் அடிக்கல்**

மேற்பட்ட விவரங்களுக்கு பின்காணும் கூபபனை உபயோகிக்கவும

திரு. எஸ். ராமநாதன்,
அஸிஸ்டென்ட் ப்ரொடக்ஷன் மேனேஜர்,
ரீஜியனல் டிஸ்டிரிபியூஷன் சென்டர்,
35, ஹாடோஸ் ரோட்,
கிரௌண்ட் ஃப்ளோர்,
பிளாக் ந. 5,
சாஸ்த்திரி பவன்,
மெட்ராஸ்-600 006.

புதிய 20 அம்ச திட்டம் பற்றி விவரமாக தெரிந்து கொள்ள விரும்புகிறேன். தயவு செய்து, எனக்கு இது குறித்த தமிழ்/ஆங்கில நூல் அனுப்பவும்.

பெயர் ..............................

விலாசம் ..............................

.............................. பின் ..............................

**புதிய 20 அம்ச திட்டம்**

davp 83/93

# வளரும் குழந்தைகளுக்குத்

## தேவை ஒரு விசேட திட உணவு...

# ஃபாரெக்ஸ்

காரணம், குழந்தைகளின் விரைந்த முழுவளர்ச்சிக்கான
அதிக ஊட்டச்சத்துள்ள திட உணவாகும் ஃபாரெக்ஸ்.

1. ஃபாரெக்ஸ் புரதச்சத்து நிரம்பியதாகும்—உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு இது அத்தியாவசியமாகும்.

2. ஃபாரெக்ஸ் வேறெந்த பிராண்டு செய்யப்பட்ட திட உணவைக் காட்டிலும் அதிக இரும்புச் சத்துள்ளதாகும். இது குழந்தைக்குத் தொற்றுநோய் எதிர்ப்புச் சக்தியையும் ஆரோக்கியமான இரத்தத்தையும் அளிக்கிறது.

3. ஃபாரெக்ஸில் கால்ஷியம் மற்றும் ஃபாஸ்ஃபரஸ் சரியான விகிதத்தில் சேர்ந்திருக்கின்றன. ஆரோக்கியமான எலும்புகளையும் திடமான பற்களையும் பெற இவை உதவுகின்றன.

4. தவிர ஃபாரெக்ஸ், குழந்தையின் மென்மையான செரிக்கும் சக்திக்கேற்றவாறு விசேஷமாக முன்கூட்டியே பக்குவம் செய்யப்பட்டதாகும்.




டாக்டர்கள் சிபாரிசு செய்வது

# ஃபாரெக்ஸ் ®

வழங்குவோர் க்ளாக்ஸோ

CASGLF-42-203 TM

''**பா**ர்க்கிறவர்கள் தப்பாக நினைத்துக் கொள்ளப் போகிறார்கள். வா விஜி. ப்ளீஸ்!'' —தியாகு மிகவும் பரிதாபமாகக் கெஞ்சினான்!—

''ம், ஹூஹும்!'' —

விஜி. பலமாகத் தலையை ஆட்டி மறுத்தாள்!

''நான் உன்னைக் கடித்தா தின்றுவிடப் போகிறேன்?'' —

''அப்படித் தின்பதாக இருந்தால் கூட நான் சம்மதிப்பேன்! இது மட்டும் வேண்டாம்!'' —

''ஏனாம்?'' —

''வேணாம்னா வேணாம்! ஏன்? என்னன்னு எல்லாம் என்ன கேள்வி?—''

''நாம் இருவரும் மனப்பூர்வமாக நேசிக்கிறோம் என்பது உண்மைதானே? பிறகு இதற்கு மட்டும் என்ன பயமும் வெங்காயமும்?'' —

''பயப்பட வேண்டியதற்கு பயப்படாமல் இருக்கக் கூடாதே! இது தப்பு!''

''என்ன தப்பு? நம் இருவருக்கும் தான் கல்யாணம் ஆகப் போகிறது!'' —

''இது என்ன தப்பு என்பது அப்புறம் இருக்கட்டும். இதில் எங்கே நியாயம் என்று கொஞ்சம் தனியாக உட்கார்ந்து யோசித்துப் பாருங்கள், அப்போது உங்களுக்கே புரியும்!''—

சேர்ந்துதான் இப்படி ஒரு ஆசையைத் தூண்டுகிறது — நீ சம்மதிக்காவிட்டால் நான் மிகவும் ஏமாந்து போவேன் விஜி!''—

''என்றைக்குமே கிடைக்கப் போவதில்லை- என்ற விஷயத்தில் தான் ஏமாற்றம் பொருந்தும் — இது 'இன்றைக்கு வேண்டாம்' — என்று ஒத்திப் போடுவது தான். இது ஏமாற்றமில்லை.— ஜஸ்ட் டைவர்ட் யுவர் மைண்ட்!''—

''உன் அளவிற்கு சாமர்த்தியமாக எனக்குப் பேசத் தெரியவில்லை விஜி — இப்போ எனக்கு நீ வேணும். முடியுமா? முடியாதா சொல்!''

—விஜி 'சட்'டென்று நிமிர்ந்து அவனைப் பார்த்தாள்!— பார்வை அவனுடைய பௌதிக உடம்பைத் துளைத்து அதன் உள்ளே இருக்கும் மனசைத் தேடியது!— ''இவ்வளவு தான் நீயா?'' — என்று அவனைப் பார்த்து பரிகசித்தது! 'எல்லா ஆண்களும், அன்பு என்றும், காதல் என்றும், அறிவு பூர்வமான தொடர்பு என்றும் வித விதமான பெயரை வைத்துக் கொண்டு மனத்தளவில்; பசியும், வெறியும் நிரம்பிய விலங்கு ஒன்று தன் இரையை வீழ்த்தி பசிதீர்த்துக்கொள் வதிலேயே குறியாய் இருக்கிற மாதிரி— ஏதேனும் ஒரு பலவீனமான

# அரவிந்தன்

# ''மனதிற்கு எத்தனை முகங்கள்!''



''நாம் இருவரும் இவ்வளவு நாட்கள் காதலித்து கொண்டிருந்திருக்கிறோம்! இவ்வளவு நாளில் உன் விரல் நகத்தையாவது தொட்டிருப்பேனா?— இன்று இங்கே இருக்கும் சந்தோஷமான மனநிலையும் — அதற்கு ஏற்ற மாதிரி குளிரும் — இந்த ஏகாந்த நிலையும்— நீ சொன்ன இந்த இயற்கை அழகு மனதில் ஏற்படுத்தின மாற்றங்களும் எல்லாமாகச்

கணத்தில் பெண்மையின் சூட்சுமமான இடத்தில தட்டி அவளை அடைந்து விடவே துடிக்கிறார்களோ?–' என்று சந்தேகப்பட்டது!–சே! இவ்வளவுதானா? இதற்காகத்தானா இவ்வளவு நாளின் நேசமும், எதிர்பார்ப்பும்; காத்திருத்தல்களும் – எல்லாமே இதற்காகத் தானா? – தீர்ந்ததா – எல்லாம்? – என்று ஆயாசப்பட்டது!–

அவன் பார்வைக்குள் இருந்து விதவிதமான அர்த்தங்கள் ஜனித்துக்கொண்டே இருந்தன!–

அதைப்பற்றியெல்லாம் கவலைப்படும் மனநிலையில் ரேகா இருக்கவில்லை! – அவனுக்கு அப்போது அவள் வேண்டும் –

''இதுதான் உன் இறுதியான முடிவா விஜி?'' –



''உறுதியான முடிவும் கூட!''

''ஆல்ரைட்!'' —

தியாகு 'சட்'டென்று முகத்தைத் திருப்பி கொண்டான்!—

''ப்ளீஸ் தியாகு! என்னைப் பாருங்கள். ஏன் இன்றைக்கு இப்படி ஒரு திடீர் ஆசை உங்களுக்கு?— நான் என்றைக்கு இருந்தாலும் ஒருநாள் உங்கள் பரிபூரண உரிமை ஆகப் போகிறவன் தானே? அதுவரைக்கும் பொறுமையாக இருந்து அந்த உரிமையை— 'முறைப்படியே' அடையக் கூடாதா? இப்போது உங்கள் வற்புறுத்தலுக்காக நானே சம்மதித்தாலும் அதில் என் மனப்பூர்வமான சம்மதமும், ஈடுபாடும் எதுவுமே இருக்காது! வெறும் இயந்திரகதியான உடல் இயக்கங்களா உங்களுக்குத் தேவை? — மனசு இல்லையா? ப்ளீஸ்.... என்னைப் புரிந்து கொள்ளுங்கள்! 'தப்பு பண்ணுகிறோமோ?' 'தப்பு பண்ணுகிறோமோ?' என்று நொடிக்கு நொடி பயந்து, பயந்து—' ''ஏதாவது விபரீதமாக ஆகிவிட்டால்?...— என்று உள் மனசில் திகிலை சுமந்து கொண்டு — வெளியே உங்களோடு பொய்யாய் சிரித்து— பொய்யாய் போலியாய்... உங்களுடன் எனக்கு ஏற்படுகிற முதல் உறவின் அனுபவம் இப்படி மாறிப் போவதில் எனக்கு சம்மதமே இல்லை! — ப்ளீஸ் தியாகு... ப்ளீஸ்...!''-

**சத்தான காபி**

**ஒரு கிலோ காப்பி கொட்டையுடன் 50 கிராம் சம்பா கோதுமையை பொன்னிறமாக வறுத்து அரைக்க வேண்டும். சத்தான காபியும், திக்கான காபியாகவும் இருக்கும்.**

**—சித்ரா செல்வம்**

விஜியின் குரல் கரகரத்து கம்ம — கண்களில் 'சட்'டென்று நீர் கோர்த்துக் கொண்டது!—

தியாகு அவள் பக்கம் திரும்பவே இல்லை! —

வேறுபக்கம் திரும்பிக்கொண்டே — ''அப்படியானால் நாம் கிளம்பலாம்!'' — என்றான்! — 'சட்'டென்று எழுந்து கொண்டான் — 'விடுவிடு'வென்று நடந்தான் —

சற்று முன்புவரை ரம்யமாய் உள்ளத்தை கொள்ளை கொண்ட மரங்களும், செடி கொடிகளும் — பசுமையான மலைச்சரிவுகளும், இதமான சீதோஷ்ணமும் — குளிரும் வானமும், பறவைகளும், உற்சாகமாய் தெரிந்த மனிதமுகங்களும் எல்லாமே ஒரு நொடிக்குள் அஃறிணையாய் — மனதோடு சம்பந்தப்படாதவைகளாய் மாறிப்போக— அவள் வெறுமையாய் நடந்து கொண்டிருந்தாள்!—

ஏற்காடு வரும் வரையிலும் கூட அவன் மனசில் இப்படி ஒரு ஆசை இருக்கும் என்று அவளுக்குத் தெரியவே இல்லை!—

பஸ்ஸில் மலையேறி வரும்போது இயற்கைக் காட்சிகளை ரசிக்க அவன் அவள் பக்கமாக குறுக்கே சாய்ந்து வெளியே எட்டிப் பார்த்த போது மெத்தென்ற அவன் மார்பும், தொடைகளும் சுவாதீனமாக அவள் மீது இடித்துக் கொண்டும், பட்டுக் கொண்டும்தான் இருந்தன!—

அப்போது எல்லாம் கூட அந்த ஸ்பரிசத்தில் விகல்பமே தெரியவில்லை அவளுக்கு!—

அவன் மனதிலும் அவள் மீது இடிக்கிறோம், படுகிறோம் — என்ற கிளர்ச்சி உணர்வு இருந்தமாதிரி கூடத் தெரியவில்லை!—

''அவ்வளவு இயல்பாய் — அவ்வளவு கண்ணியமாய் வந்தவன் ஒரு நொடியில் மாறிப் போய் விட்டது எப்படி?'' — என்று அவளுக்குப் புரியவே இல்லை!—

மௌனமாகவே பஸ் ஸ்டாண்டை அடைந்து காத்துக் கொண்டிருந்த பஸ்ஸில் ஏறி உட்கார்ந்தார்கள்.

இருவரும் அருகருகே அமர்ந்திருந்தாலும், பஸ் பிரயாணம் முடியும் வரை எங்கோ இருந்தார்கள். மௌனமாகவே பஸ்ஸை விட்டு இறங்கினார்கள்.

விஜி கண்களை மூடியபடி உட்கார்ந்திருந்தாள்! மனதில் அந்த சந்தர்ப்பத்திற்கும், சூழ்நிலைக்கும் — சற்றுமுன்பு அங்கே நடந்ததற்கும் — எதற்குமே சம்பந்தமில்லாமல் வேறு ஏதேதோ நினைவுகள் குறுக்கும் நெடுக்குமாய் ஓடின!—

தன்னுடைய பதின்மூன்றாவது வயதில் பறிகொடுத்த அவளுடைய அப்பாவின் முகம் தெரிந்தது. அந்த ஒரு முகம் மட்டும் தான் அவளுக்கு நன்றாக நினைவு இருந்தது. மற்ற உறவுக்காரர்கள் அவ்வளவு பேரும் அந்தக் குடும்பத்தின் சுமை தங்கள் தோள்களுக்கு வந்துவிடப் போகிறதே!'' என்று பயந்து ஒதுங்கி நின்ற நிகழ்ச்சி நினைவில் இருந்த அளவிற்கு அவர்களில் ஒருவரின் முகம்கூட அவளுக்கு நினைவுக்கு வரவில்லை.

தன்னையும் தன் தம்பியையும் வளர்த்து ஆளாக்குகிற பொறுப்பை சுமந்துகொண்டு இயந்திரமாய் உலவிய அவள் அம்மா அவள் படித்து உத்யோகத்துக்குப் போய் முதல் மாத சம்பளத்தை வாங்கிக் கொண்டு வந்து தன் கைநிறையக் கொடுப்பதை அனுபவிக்கக் கொடுத்து வைக்காமல் இறந்து போனதும் நினைவுக்கு வந்தது.

அப்போதும் அம்மா இறந்துவிட்டதைக் குறித்துக் கூடத் தனக்கு அழுகை வராமல் வந்திருந்த கொஞ்சநஞ்ச உறவினர்களும்

'எங்கே அவனுடைய கல்யாணச் சுமையும், அவள் தம்பியின் படிப்புச் செலவும் தங்கள் மீது வந்து விழுந்து விடுமோ?' என்று நழுவியது தெரிந்தே தனக்கு அழுகை வந்தது என்பதையும் அவள் நினைத்துப் பார்த்தாள்.

அன்று — அவளுடைய ஹாஸ்டல் வாசலில் கொண்டு வந்து விடும் வரையிலும் கூட அவன் அவளுடன் எதுவுமே பேசவில்லை!—

[2]

"உனக்கு ஒரு 'ப்ளஸண்ட் சர்ப்ரைஸ்'! என்னவென்று சொல் பார்க்கலாம்!"

ஸ்கூலுக்குள் அவசரம் அவசரமாக நுழைந்து கொண்டிருந்த தன் முன்னால் வழியை மறிப்பது போல நின்று கொண்டு கேட்ட சக டீச்சர் மஞ்சுளாவை ஆச்சரியத்துடன் பார்த்தாள் விஜி!—

மஞ்சுவின் முகத்தில் சந்தோஷம் கொப்பளித்துக் கொண்டிருந்தது!—

கைகளை பின்புறமாகக் கட்டிக் கொண்டு அவள் நின்றிருந்த நிலையே அந்த சந்தோஷத்திற்கு சாட்சி சொல்லிற்று!—

"ஏதாவது ப்ரமோஷனா?"

"ஏ. பி. ஸி. டீ. என்று நான்கு செக்ஷன் ஆங்கிலப் பாடத்துக்கும் நான் ஒருத்தியே போக வேண்டியிருப்பதற்கு பதிலாக வேறொரு டீச்சரை அப்பாய்ண்ட்மெண்ட் பண்ணி இருப்பார்களோ?—"

"என்னடீ அது?" — என்றாள்.

"நீயே யோசிச்சு சொல்லேன் பார்க்கலாம்."

"எனக்கு எதுவும் தோணலைடீ மஞ்சு!"—

"என்னடீ கோபமாக இருக்கிறாயா? நேத்து டிரிப் ஜாலியாக இருந்ததா? — ஹாஸ்டல் வார்டன் அம்மா நீ கிளம்பிப் போனதும் சீக்கிரம் இவங்க இரண்டு பேருக்கும் கல்யாணத்தைப் பண்ணிடணும்னாள்!

அவங்க காதல் ரொம்ப ஸ்டிராங். ரெண்டு பேருமே ரொம்ப கண்ணியமானவங்க. விஜிக்கு அவள் தம்பி கோயம்புத்தூரிலே அக்ரிகல்சுரல் காலேஜிலே பி.எஸ்ஸி படிக்கிறானாம். அவன் படிப்பு முடிஞ்சு அவன் ஒரு வழியா செட்டில் ஆன பிறகுதான் கல்யாணம் பண்ணிக்கிறது'ன்னு ஒரு எய்ம் இருக்கு! அதேபோல அவர் — மிஸ்டர் தியாகுவுக்கு ஒரு தங்கை இருக்காளாம். அவளுக்கு கல்யாணத்துக்கு ரொம்ப சீரியஸாகப் பார்த்துக் கொண்டு இருக்கிறார்களாம்! அந்தக் கல்யாணம் முடிந்த பிறகுதான் அவரும் தன்னுடைய கல்யாணம்னு உறுதியா இருக்காராம். ஸோ — ரெண்டு பேரும் ஆளுக்கு ஒரு எய்மோட உறுதியா இருக்காங்க! — விடலைகள் காதல் மாதிரி இவங்களை நினைச்சு கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை!"ன்னு பெரிய லெக்சரே அடிச்சிட்டா!

நான் வராந்தாவிலே நின்னு கேட்டுக்கிட்டிருந்தேன்!"

மஞ்சு வழக்கம் போல சுவாரசியமாகப் பேசிக் கொண்டே இருந்தாள்.

விஜி முதல்நாளின் பாதிப்பிலிருந்து இன்னும் பரிபூரணமாக விடுபட்டிருக்கவில்லை.

வெளியிலே எல்லோரிடத்திலும் வைராக்கியத்தோடும் பிடிவாதத்துடனும் இருக்க முடிந்தாலும் தியாகு ஒருவனிடம் மட்டும் அந்த வைராக்கியமும் பிடிவாதமும் பின்தங்கிப் போய் ஆசையும் ஏக்கமும் வளர்ந்து நிற்பதை அவளால் உணர முடிந்தது.

முதல்நாள் இரவு முழுவதும் அந்த ஏக்கம்தான் அவளை வருத்திக் கொண்டிருந்தது.

ஹாஸ்டல் வாசலில் அவளை விட்டுவிட்டுப் போகும் அந்தக் கடைசி நிமிடத்திலாவது அவன் ஏதாவது பேசுவான் — அல்லது எப்போதும் சொல்லுகிற மாதிரி "ஸீயூ"—வென்றாவது சொல்லிவிட்டுச் செல்வான் என்று எதிர்பார்த்தாள் விஜி.

அவன் அப்போதும் கூட ஒரு வார்த்தையும் பேசாமல் மௌனமாகவே இருந்துவிட்டது அவள் இதயத்தைக் குடைந்தெடுத்தது!

"அவ்வளவு கோபமா?"— என்று தனக்குள்ளாகவே கேட்டுக் கொண்டாள்.

தியாகுவின் நிலையை எண்ணி அனுதாபமும், பரிவும் கூட ஏற்பட்டது அப்போது.

"ஏய்.... நான் உன் எதிரில் நிற்கிறேன் என்னை விட்டுவிட்டு எங்கே பார்க்கிறாய்? இந்த ஸ்கூல்லே எல்லாருக்கும் லெட்டர் வருது — எனக்கு மட்டும் வர்றதே இல்லைன்னு அடிக்கடி சொல்லுவே இல்லே.— இன்னிக்கு உனக்கு ஒரு கவர் வந்திருக்கு!— அதைச் சொல்லத்தான் இத்தனை சந்தோஷத்தோட ஓடி வந்தேன்."

விஜி மௌனமாகவே மஞ்சுவிடம் இருந்து அந்தக் கவரை வாங்கிக் கொண்டாள்.—

யார் போட்டிருப்பார்கள்? அதுவும் நமக்கு? நமக்கு லெட்டர் போடுகிற அள

முகப்பருக்கள் போக சுலபமான வழி. திருமண்கட்டி (வைணவர்கள் இட்டுக் கொள்ளும் திருமண்)யைக் குழைத்துப் பருமேல் போடுங்கள். வடக்கே உல்லாசப்பயணம் போகிறவர்களிடம் சொல்லி "முல்டானி மட்டி" என்று வாங்கி வரச்சொல்லுங்கள். இதுவும் திருமண் வகைதான். பரு இருந்த இடம் தெரியாமல் மடிந்துவிடும்.

-ரோஜி

வுக்கு யார்?... என்று மனம் அலைபுரள ஆரம்பித்து விட்டது.

''உனக்கு யாருடீ லெட்டர் போட்டிருக்காங்க. மாசாமாசம் உன் தம்பிதான் ஒரு லெட்டர் போடுவான். லெட்டரா அது?—தந்தி.''

கவரைக் கிழித்து கடிதத்தை எடுத்த விஜி அதைப் பிரிக்கவும் ஸ்கூல் பெல் அடிக்கவும் சரியாக இருந்தது!

''ஏய்... வாடி... லெட்டரை அப்புறம் படிச்சுக்கலாம்... ப்ரேயருக்கு லேட்டாகப் போனால் மாமனார் சும்மா விடமாட்டார்!''—என்று அவள் கையைப் பற்றி இழுத்துக் கொண்டு ஓடினாள் மஞ்சு! பரபரப்புடன் லெட்டரைக் கைப்பைக்குள் திணித்துக் கொண்டி ஓடினாள் விஜி.



ஆப்பத்திற்கு அரைக்கும்போது தேங்காய் சேர்க்காமலிருக்க வேண்டுமென்றால் ஒரு டேபிள் ஸ்பூன் கோதுமையை ஊற வைத்து அரிசியுடன் சேர்த்து அரைத்தால் ஆப்பம் மிருதுவாக இருக்கும்.

-பிலோமினா



ஹெச். எம். எல்லோருக்கும் முன்னால் ப்ரேயர் மைதானத்துக்கு வந்து காத்திருந்தார் — சோடாபாட்டில் கண்ணாடிக்குள் கிழே விளைந்த பார்வை தாமதமாக வருபவர்களை எண்ணிக் கொண்டிருந்தது.—

''மாமனார் என்று இவருக்கு சரியான பெயரைத்தானடீ வைத்திருக்கிறாய் மஞ்சு! நாளைக்கு நமக்கு வருகிற மாமியார், மாமனார் எப்படியோ? இது அசல்!'' என்ற விஜியின் ஸ்லாசல் முழங்கையால் இடித்த மஞ்சு; ''எங்களுக்கு மாமனார் அமையலாம். உனக்கு மாமியார் மட்டும்தான். மாமனார் ஏது?'' – என்று அவள் காதுபக்கமாகக் கிசுகிசுத்தாள்!— ஒரு கணத்தில் விஜியின் முகம் சிவந்து போயிற்று!—

''ச்சீ... போடீ...'' என்றாள்.—

''நீராரும் கடலுடுத்த...'' தமிழ்த்தாய் வாழ்த்து கோரஸாக எழுந்தது.—

ப்ரேயர் முடிந்து மாணவர்கள் வரிசை வரிசையாக அவரவர் வகுப்புகளுக்குப் போனார்கள்!— காலை நான்கு பீரியடுகளுமே போக வேண்டியிருந்தது அவளுக்கு.—

பரபரப்பான அந்த நேரங்களில் கடிதத்தைப் பற்றியே மறந்து விட்டாள்.

ஒருவழியாக மூன்று பீரியட்டுகளும் முடிந்து; நாலாவதில் டி. செக்ஷனில் நெவில்கார்டஸின் 'கிரிக்கெட்' பாடம் நடத்துகையில் — மாணவர்களுக்குப் பயிற்சிக்காக தங்கள் — ''நண்பனுக்கு தான் பார்த்த கிரிக்கெட் மேட்ச் ஒன்றைப்பற்றி 'லெட்டர் ஒன்று எழுதிக் கொண்டு வரவேண்டும்!'' என்று சொல்லிக் கொண்டிருந்த போது 'சட்'டென்று தன்னுடைய பைக்குள் காத்திருக்கும் அந்த லெட்டரின் நினைவு அவளுக்கு வந்தது!—

மாணவர்களை சாப்பாட்டு இடைவேளைக்காக அனுப்பிவிட்டு கிளாஸ் ரூமிலேயே உட்கார்ந்தபடி பையில் இருந்து அந்த லெட்டரை எடுத்துப் படிக்க ஆரம்பித்தாள்.

படிக்க படிக்க — அவள் உடம்பே பற்றி எரிகிற மாதிரி இருந்தது.— யாரோ தன்மீது நெருப்பை வாரிக் கொட்டியதுபோலமனமும் உடம்பும் ஒருசேரத் துடித்தன!

அது ஒரு காதல் கடிதம்!

எழுதியது நிர்மல்குமார் — அவள் மாணவன்.

## [3]

மாலை மணி நாலு! —

நாலரை மணிக்கே ஸ்கூலை விட்டு எல்லோரும் போய்விட்டார்கள்! ''கீச்கீச்'' என்ற பறவைகள் சப்தம் ஓய்ந்து போன மரம் மாதிரி ஸ்கூல் அமைதியாய் இருந்தது!

காலியாய் இருந்த வகுப்பறைகள் ஒவ்வொன்றையும் கடக்கும் போது — வெறுமையாய் இருந்த பெஞ்சுகளும், மேஜைகளும் — அரைகுறையாய் எழுதப்பட்டிருந்த கரும்பலகைகளும் — எல்லாமே தமக்குள் ஒரு வகையான அழுத்தத்தை சுமந்து கொண்டு அழுது கொண்டிருப்பது போலத் தோன்றியது அவளுக்கு!

ஹெட்மாஸ்டரின் அறை மாடியில் இருந்தது! — அதற்கான மாடிப்படிகளைக் கடக்கும் போது அந்தச் சப்தமே தன்னை பயமுறுத்துவது போல உணர்ந்தாள் விஜி!—

மெதுவாக நடந்தாள்.

ஹெச்.எம். அறைக்குள் யாரோ உரத்த குரலில் பேசும் சப்தம் கேட்டது! — கொஞ்சம் கட்டையும் கடுமையான குரல் அவருக்கு!—அதற்கு சுரம் போட்டது போல ஒரு சன்னமான குரலும்; இடையிடையே மிருதங்க முத்தாய்ப்புப் போல ஒரு மூன்றாவது குரலும் கேட்டது. அவள் ஹெச்.எம். அறையை நெருங்கிய போது வாசலில் உட்கார்ந்திருந்த ப்யூன் எழுந்து நின்றான்.

''உள்ளே ஐயாவும் அசிஸ்டெண்ட் ஹெட்மாஸ்டரும், அக்கவுண்டண்ட்டும் பேசிக்கிட்டு இருக்காங்கம்மா!'' —என்றான்.

''ரொம்ப நேரமாக பேசிக்கிட்டிருக்காங்களா?'' —

''ஆமாம்மா. நாலரை மணியிலேர்ந்தே பேசறாங்க....!''

அவன் குரலில் அலுப்பு ஏராளமாகவே தெரிந்ததை அவள் கவனித்தாள்.

''நான் லைப்ரரி ரூமிலே இருக்கிறேன். அவங்க கிளம்பினதும் சொல்லு!'' என்றாள்.—




''ஆகட்டும்மா!'' — என்ற ப்யூனின் குரல் உற்சாகமாக இருக்கவில்லை என் பதை அவளும் கவனித்தாள்!—

அவள் எதிர்பார்த்தது தான் அது!—

''உள்ளே இருப்பவர்கள் பேசிப்பேசியே பழியெடுக்கிறது போதாது என்று நீங்க வேறயாம்மா?'' — என்று அவன் பார்வைக்கு அர்த்தப்படுத்திப் பார்த்துக் கொண்டான்.—

லைப்ரரி ஹால் வெறிச்சோடிக் கிடந்தது.—

வரிசைவரிசையாக கண்ணாடி பதித்த பீரோக்கள் நிறைய புத்தகங்களை நிறை வைத்திருந்தன! சுவரில் பாரதி, பாரதி தாசன், தாகூர் — பெர்னார்ட்ஷா, பைரன்— என்று வரிசையாகப் படங்கள்!

மூலையில் ஒரு கண்ணாடி ஷோ கேஸில் பளிங்கு கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு கீதை சொல்லிக் கொண்டிருக்க — ரதத்தில் பூட்டிய குதிரைகள் சாதுவாக நின்றிருந்தன!—

விஜி எல்லாவற்றையும் பார்த்துப் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தாள்!—

கையில் எடுத்த புத்தகம் கனமாயிருப்பது போலத் தோன்றியது!

பக்கத்து அறையில் இன்னும் பேச்சு சப்தம் கேட்டுக் கொண்டே இருந்தது!—

''இவங்க இப்போதைக்கு முடிக்கிறமாதிரி தெரியலேங்கம்மா. காப்பி வாங்கிக்கிட்டு வரச் சொல்லியிருக்காங்க.— கடைக்குப் போறேன். உங்களுக்கும் காப்பி வாங்கி வரணுமாம்மா?'' — தண்ணீர் சொட்டிய ப்ளாஸ்க் மூடியை உதறியபடி வந்து நின்ற பியூனை அனிச்சையாக நிமிர்ந்து பார்த்தாள்!

உண்மையில் அவளுக்கு நிறையவே தலைவலியாய் இருந்தது!— காப்பிக்குச் சொன்னாள்!—

காசு எடுப்பதற்காகக் கைப்பையில் தேடிய பொழுது கையில் அந்தக் கவர் தட்டுப்பட்டது!— உடனே ஏதோ அருவருப் பானதைத் தொட்டுவிட்டதைப் போல அவ ளுடைய, மனமும் உடலும் கூசிப்போயின!

அந்தக் கடிதத்தைப் படிக்கும்போது ஏற்பட்ட ஆத்திரமும், கோபமும், அவ மானமுமான எவ்வளவோ உணர்ச்சிகள் அத்தனையும் மீண்டும் ஏற்பட்டன! —

ப்யூனிடம் காசைக் கொடுத்தனுப்பிவிட்டு தனியாக இருக்கும்போது — அந்தக் கடிதத் தின் நினைவு வந்தது — மனதில் 'சுர்'ரென்று எரிச்சல் ஏற்பட்டது!—

அன்புள்ள டீச்சர், என்று துவங்கி இருந்தது அந்தக் கடிதம்!

'முதலில் அந்த அழைப்பைப் பார்த்த துமே திகைப்பும் ஆச்சரியமும் எழ கடிதத் தின் அடிப்பகுதியைப் பார்த்தாள்.

நிர்மல்குமார் என்ற பெயரைப் படித்த தும் சுருட்டைத் தலையும், சுமாரான உயர மும் சிவப்பு நிறமும் அருநெல்லிக்காய்களைப் போல் முகப்பருவும் — உதட்டுக்கு மேலே லேசாக அரும்பு கட்டியிருந்த மீசையும் அவன் கண்களில் தெரியும் வெளிச்சமும்

எல்லாமே அவள் நினைவுக்குள் 'சட்'டென்று தெரிந்தன!

முதல் ரேங்க் மாணவன் அவன்!—

அதிகம் யாருடனும் பேசமாட்டான் இரண்டாவது 'ரோ'வில் மூன்றாவது பெஞ்ச் கடைசியில் உட்கார்ந்திருப்பான்.—

அவள் பாடம் நடத்தும்போது அவன் மிகவும் கவனமாகக் கேட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்தாலே படிப்பின் மீது அவனுக்கு உள்ள ஆர்வமும் வேகமும் தெரியும்.

வகுப்பில் கேட்கப்படும் கேள்விகளுக்கு பெரும்பாலும் அவன்தான் சரியான பதிலைச் சொல்லுவான்!

அப்படிப்பட்டவனிடம் இருந்து தனக்கு தனிப்பட்ட முறையில் கடிதமா? என்னவாக இருக்கும்? பாட சம்பந்தமான சந்தேகமா? படிப்புக்கு ஏதாவது பண உதவியா? பர்ஸனல் ப்ராப்ளம் ஏதாவது இருக்குமோ? என்ன எழுதியிருப்பான்? எதற்காக இந்தக் கடிதம்?



இதே திருமண்ணைக் குழைத்து சளிக்கட்டுடன் தூங்க முடியாது அவஸ்தைப்படும் குழந்தைகளுக்கு நெற்றியில், மூக்கு ஓரப்பகுதி, நெற்றிப் பொட்டில் போடுங்கள். ஜில்லென்று சளியை, நீரை இழுத்துக்கொண்டு சுகமாகக் குழந்தைகளைத் தூங்கச் செய்யும். -ரோஜி



அவளுடைய அழகும் அறிவும் அடக்கமான சுபாவமும் அவனுக்கு மிகவும் பிடித்திருக்கிறதாம்!

இவை எல்லாவற்றையும் விட அவள் பாடம் சொல்லிக் கொடுக்கும் திறமைக்கு அவன் அப்படியே அடிமையாகி விட்டானாம்!

ராத்திரி நேரங்களில் படிப்பதற்காக பாடப்புத்தகங்களைத் திறந்தால் அதில் பாடத்துக்குப் பதில் அவள் முகம்தான் தெரிகிறதாம்! அந்த அழகு முகம் இரவு முழுவதும் அவனைத் தூங்க விடாமல் அவஸ்தைப்படுத்திக் கொண்டே இருக்கிறதாம்!

அவன் அவளை மனப்பூர்வமாகக் காதலிக்கிறானாம்! அவள் இல்லாவிட்டால் அவனுக்கு வாழ்க்கையே இல்லையாம்! சம்மதமா? என்று கேட்டு எழுதி இருந்தான்.

''சை!'' — காரித் துப்புகிற ஆத்திரத்திலும் கோபத்திலும் அந்தக் கடிதத்தை அப்படியே கசக்கி வீசி எறிந்தாள் விஜி!

தெரியாமல் நெருப்பை மிதித்து சுட்டுக் கொண்டது போல அவள் உடம்பும் மனமும் பதறித் துடித்துக் கொண்டிருந்தது.

'ஃபானை'யும் மீறி வியர்வை வெள்ளமாய் ஊற்றெடுத்து வழிந்தது.

ஏன்? எதற்கு? என்று தெரியாமல் எதற்கோ தனியாகப் போய் உட்கார்ந்து கொண்டு குலுங்கிக் குலுங்கி அழவேண்டும் போலிருந்தது அவளுக்கு!

அவள் உடம்பு நெடுநேரம் நடுங்கிக் கொண்டே இருந்தது!

'ஆஃப்டர் ஆல்' தன்னிடம் படிக்கும் ஒரு ஸ்டூடெண்ட்! அவனுக்கு எப்படி இவ்வளவு தைரியம் வந்தது.—

அதன் பின்விளைவுகளைப் பற்றி அவன் நினைத்தாவது பார்த்திருப்பானா? பார்த்திருந்தால் இப்படியொரு லெட்டரைப் பயம் எதுவுமில்லாமல் எழுதியிருப்பானா!—

நினைக்க நினைக்க அவள் நெஞ்சமெல்லாம் பதறியது!—

'ஒரு மாணவன் பதினேழு பதினெட்டு வயது சிறுவன். வாழ்க்கை என்றால் என்னவென்று புரியாத அடோலஸெண்ட்... இவன் மனதில் கூட இத்தனை மோசமான எண்ணங்களை ஏற்படுத்துகிற அளவுக்குத் தன்னுடைய உருவம் அவ்வளவு கேவலமாகவா இருக்கிறது?'' என்று வருத்தத்துடன் நினைத்துக் கொண்டாள்!—

''ஒரு டீச்சர் தன்னைவிட வயது அதிகமானவள். எந்த வகையிலும் தன்னால் வேறு விதமாக நினைத்துப் பார்க்க முடியாதவள்''- என்றெல்லாம் எந்த உணர்ச்சியும் அவனுக்கு ஏற்பட முடியாதபடி இல்லாமல் அவ்வளவு சுலபமாக உணர்ச்சி வசப்படுத்துகிற மாதிரியா...''

அன்றைக்கு மத்தியானம் அவள் வகுப்புகளுக்கே போகவில்லை! — பயங்கரமாய் தலை வலிக்கிறது என்று சொல்லி ஒரு பீரியட் லீஷர் வாங்கிக் கொண்டாள். மற்றொரு வகுப்புக்குப் போய் காம்போஸிஷன் எழுதச் சொல்லிவிட்டு ஓய்வு அறைக்குத் திரும்பி விட்டாள். மூன்றாவது பீரியட் வழக்கப்படியே அவளுக்கு ஓய்வு பீரியடாகஅமைந்து விட்டது!—

அவ்வளவு நேரமும் தனியாக உட்கார்ந்து கொண்டு எவ்வளவோ யோசித்தாள்!—

யோசிக்க யோசிக்க குழப்பமும், கவலையும், கோபமும், ஆத்திரமும் தான் பொங்கியது!—

தன்னையும் தன்னுடைய ஒரே தம்பியையும் ஆதரவற்ற அனாதைகளாக விட்டுவிட்டு போய்விட்ட தன்னுடைய பெற்றோரை நினைத்துக் கொண்டாள்.—

அப்போது அழுகை இன்னும் அதிகமாக ஆயிற்றே தவிர குறையவில்லை.—

கடிதத்தை அப்படியே சுக்கல் சுக்கலாக கிழித்து வீதியில் எறிந்துவிட நினைத்தாள்.

அந்த சுருட்டை மயிரோடு அவனை அப்படியே இழுத்துக் கொண்டு வந்து கன்னம் ஒட்டிக் கொள்ள ஒட்டிக் கொள்ள

# சம்பந்தி அம்மாள் மகிழ்ந்தாள்!

''பிள்ளை வீட்டுக்கார அம்மாள் நாம கொடுக்க இருக்கிற சீர் வரிசைகளை எல்லாம் பார்த்தாங்க. கப்பல் கப்பலா, அடுக்கடுக்காக சீர் வரிசை லிஸ்டைப் படிச்சாங்க. அவங்க முகத்தையே கவனிச்சிட்டு இருந்தேன். ஊஹூம்! ஒரு மாறுதல் இல்லை...பயந்து போயிட்டேன், திருப்தியே இருக்காதா அந்த அம்மாளுக்குன்னு...''

''அப்புறம் அப்புறம்?''

''லிஸ்டிலே கடைசிப் பக்கத்துக்கு வந்துட்டாங்க...ஊஹூம்! முகத்திலே மாறுதலே இல்லை. திடீர்னு அந்த அம்மா முகத்திலே சந்தோஷம் வந்தது... பேஷ், பேஷ்னு சொன்னாங்க. பக்கத்திலே இருக்கிற சம்பந்திக்காரர் கிட்டே லிஸ்டைக் காம்பிச்சு எதையோ குறிப்பா சொன்னாங்க...அவர் முகத்திலேயும் மகிழ்ச்சி ஏற்பட்டது.''

''அது என்னடி அப்படி பிரமாத சீர்...? சம்பந்திக்காரங்களுக்குச் சந்தோஷத்தைத் தர விஷயம்?''

''சம்பந்தி அம்மா சொன்னாங்க... நீங்க கொஞ்சம் விபரமா அந்த ஸ்ரீராம் டிரஸ்ட் டெபாஸிட் விஷயத்தைக் கூறுங்கனு சொன்னாங்க....எங்க வீட்டுக்காரர் உடனே விவரிக்க ஆரம்பிச்சுட்டார்.''

''சொல்லு விபரமா...எனக்கும் கேட்க ஆர்வமா இருக்கு. என் பெண் கல்யாணத்துக்கும் அதே சீர்வரிசையைச் செய்யலாம் பாரு...''

''எங்க வீட்டுக்காரர் ஒரு புது யோசனையை மத்த சீர் வரிசைக்குச் சிகரமா செய்தார். அது என்னனுகேளு—நம்ம ஸ்ரீராம் டிரஸ்டிலே என் மாப்பிள்ளை பேரிலே ஒரு பிக்ஸ்ட் டெபாஸிட் செய்துள்ளார். ஒரு 1000 ரூபாதான்.''

''இந்த ஆயிரம் ரூபாய்க்காகவா அந்த சம்பந்திக்காரங்க சந்தோஷப் பட்டாங்க? எவ்வளவோ கம்பெனிகளிலே டெபாசிட்டுக்குக் கூடுதல் வட்டி தராங்க. ஸ்ரீராம் டிரஸ்ட் டெபாஸிட்டுலே அப்படி என்ன சிறப்பு ஆதாயம்?''

''அவங்க இலக்கிய ரசனையுள்ள குடும்பம். அந்த பிக்ஸட் டெபாசிட்டுலே கிடைக்கிற பலனைப் பார்த்துச் சந்தோஷப்பட்டாங்க''.

''என்ன பலன்? அதைச் சொல்லு'' ''ரூ. 1000/-த்தை ஸ்ரீராம் டிரஸ்ட் பிக்சட் டெபாஸிட்லே போட்டால் 7 வருஷத்திலே ரூ. 2000/-ஆகத் திரும்பி வருகிறது. அதோட 7 வருஷத்துக்கு 84 அமுதசுரபி மாத இதழ் தபாலிலே கிடைக்கிறது.''

''அப்புறம்?''

''7 வருஷத்துக்கு அமுதசுரபி தீபாவளி மலரும் கிடைக்கிறது. அது தவிர புதுசா கல்யாணம் ஆகிக் குடும்பம் நடத்துகிறவங்களுக்குப் பூஜை அறையில் வைக்க 6 தெய்வப் படங்கள் குடுக்கிறாங்க, ஸ்ரீராம் டிரஸ்ட்காரங்க. பிரபல தெய்வச் சித்திரங்கள் 'சில்பி' வரைந்தது... போதுமா?''

''அடடே...!பிரமாத கல்யாணப் பரிசு! நிரந்தரக் கல்யாணப் பரிசு! மன மகிழ்ச்சியான கல்யாணப் பரிசு! பேஷ்!உங்க சம்பந்தி அம்மா சந்தோஷப் படறதிலே ஆச்சரியம் என்ன? நானும் அதே மாதிரி ஒரு சீரை என் பெண் கல்யாணத்துக்கும் ஏற்பாடு செய்துடறேன்... வெளி நாட்டுலே வரன் நிச்சயமாகும் போலிருக்கே?''

''வெளிநாடுன்னு இரண்டாயிரம் ரூபாய் டெபாசிட் செய்யணும். இரண்டாயிரம் ரூபா நாலாயிரமாகக் கிடைக்கும்... அயல் நாட்டுக்கே அமுதசுரபியும் தீபாவளி மலரும் அனுப்பி வைப்பாங்க.''

''நானும் அப்படியே செய்யறேன் பார்!''

மேற்கொண்டு விபரங்களுக்குத் தொடர்பு கொள்க:

**ஸ்ரீராம் டிரஸ்ட்**

அமுதசுரபி வெளியீட்டாளர்கள்
அலுவலகம்:123, அங்கப்ப நாயக்கன் தெரு.
சென்னை-600 001



ADWAVE ST AS 2364

நாலு அறை விடலாமா? என்று யோசித்தாள். அவன் கிளாஸ் டீச்சரிடம் சொல்லி அவன் முட்டியைப் பெயர்க்கச் சொல்லலாமா என்று நினைத்தாள்! — பேசாமல் அந்த லெட்டரை எடுத்துக் கொண்டுபோய் அவன் வீட்டில் காண்பித்து ''உங்கள் பையன் படிக்கிற லட்சணத்தைப் பாருங்கள்'' என்று சொல்லிவிடுவோமா என்று நினைத்தாள்! ஹெச். எம்.மிடம் காட்டி இப்படிப்பட்ட ஒழுக்கமில்லாத பையன்கள் எல்லாம் நம்ப ஸ்கூலிலே இருக்கலாமா? எனச் சூடாகக் கேட்டு அவனுக்கு உடனடியாக டீ. சி. வாங்கிக் கொடுத்து அவனை அந்த ஸ்கூலை விட்டே துரத்தி, விட்டுவிடலாமா? என்று நினைத்தாள்!

எவ்வளவோ நேரம் அழுதும், எவ்வளவு தூரம் தனிமையில் புலம்பித்தவித்தும் எத்தனையோ நினைத்துப் பார்த்தும் அனைபிறகு கடைசியில் ஹெச்.எம்மிடம் புகார் செய்கிற யோசனையே நல்லதாகப்பட்டது.

சதா குடிக்க வேண்டும் என்ற வெறி உள்ளவர்கள் கொத்து மல்லி விதையைக் கஷாயம் செய்து பனங்கற்கண்டு சேர்த்து குடித்தால் சாராய வெறி போகுமாம்.

-லலிதா செல்லப்பா

அதற்காகத்தான் வந்து அங்கே காத்திருந்தாள் அவள்.

பியூன் கொண்டு வந்த காப்பியை எடுத்து உறிஞ்சியபடி கையில் இருந்த புத்தகத்தை அலட்சியமாகப் பிரித்து கைக்கு வந்த பக்கத்தில் இருந்ததைப் படித்தாள்.—

பிரச்சினைகளை சந்திப்பது எப்படி? புரிந்து கொள்வது எப்படி? எதிர்கொள்வது எப்படி? சமாளிப்பது எப்படி? தவிர்ப்பது எப்படி? என்று பத்திபத்தியாக விளக்கி எழுதப்பட்டிருந்த அந்தக் கட்டுரை அவளுடைய அப்போதைய மனநிலைக்கு மிகவும் பிடித்திருந்தது.

அப்போது தன்னுடைய பிரச்சினையையே முன்மாதிரியாக வைத்துக் கொண்டு கட்டுரையைப் படித்தாள்.—

....பிரச்சினை என்று வந்துவிட்டதும் தாம்தூம் என்று குதித்து பெரிய ;சனை எல்லாம் செய்வார்கள் பலர். அப்படியெல்லாம் செய்யாமல் அமைதியாக உட்கார்ந்து ஒருகணம் நிதானமாக யோசித்தால் பெரும்பாலான பிரச்சினைகள் அந்த அளவுக்கு சீரியஸானவை அல்ல என்பது புரியும்! ரெண்டாம் பேருக்கே தெரியாமல் சுலபமாக முடித்து விடக் கூடிய விஷயங்களுக்கெல்லாம் கூட நாம் பெரிய மலையைச் சுமந்து கொண்டு இருக்கிற மாதிரி கவலைப்பட்டு நம்முடைய மனதையும் உடம்பையும் வீணாக்கிக் கொண்டிருக்கிறோம் என்பது புரியும்.... என்று படித்துக் கொண்டே காப்பியைக் குடித்து முடித்தாள்!—

அதற்குத் தகுந்தாற்போல ஹெச்.எம். அறைக்குள் இருந்து, ''எல்லாத்துக்கும் நான் ஒருத்தன் இருக்கேன் என்கிறதினாலே அவங்க அவங்க என்மேலே பாரத்தைச் சுமத்திட்டு நிம்மதியா இருக்கத்தான் விரும்பறாங்க. நானும் மனுஷன்தான்! இதையெல்லாம் நீங்களே பார்த்திருக்கலாம் மிஸ்டர் தாமோதரன்! இதை இவ்வளவு தூரம் கொண்டு வந்திருக்கவே வேண்டாம்....! 'ஒரு சின்ன முயற்சியாவது செஞ்சு பார்த்திட்டு முடியலைன்னு எங்கிட்டே வாங்க! தப்பில்லே, எதுக்கு எடுத்தாலும் ஹெச். எம்., ஹெச். எம்முன்னு இருக்கக் கூடாது. தெரிஞ்சுதா?'' என்று அவர் தன்னுடைய இரட்டைநாடிக் குரலில் பேசுவது கேட்டது!—

ஒருகணம் விஜி மௌனமாக இருந்தாள். மாணி ஆறு!

ஒருவேளை தியாகு தன்னைத் தேடி ஹாஸ்டலுக்கு வந்தாலும் வரலாம் என்று அவள் உள்மனம் அவளை எச்சரித்தது!

புத்தகத்தில் படித்தாற்போலவும், ஹெச். எம். சொன்னது போலவும் இந்தப் பிரச்சினை மூன்றாம் பேருக்கே- தெரியாதபடி தங்கள் இருவரோடு மட்டும் வைத்துத் தீர்க்க ஏதாவது செய்ய முடியுமா? என்றயோசனை எழுந்தது.

ஒருகணம் மௌனமாக இருந்தாள்.

இந்தப் பிரச்சினையை ஹெச். எம். வரை கொண்டு செல்வதும், நிர்மலின் மீது டிஸிப்ளினரி ஆக்ஷன் எடுத்து அவனை அந்தப் பள்ளியைவிட்டே வெளியே தள்ளுவதும், அவன் எதிர்காலத்தையே பாழடித்துவிடுவதும் எல்லாமே மிகச்சுலபமான வேலைகள்! ஆனால் அவனைத் திருத்தி அவன் தவறை அவனே உணரும்படி செய்து அவனை மனப்பூர்வமாக திருத்தி மாற்றுவது தான் மிகமிக உயர்ந்தது! இதைச் செய்யத் தனக்கு நிறைய நேரமும் — பொறுமையும் தேவைப்படலாம் தேவைப்படட்டும்! இருந்தாலும் அதுதான் உண்மையான வெற்றியாக இருக்கும்! என்ற எண்ணம் வந்தது!

விஜி 'சட்'டென்று எழுந்து கொண்டாள்.

ப்யூனிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் விடுவிடுவென்று நடந்தாள்!

## [4]

"கங்கிராட்ஸ்...! ஹாட்ஸ் ஆஃப்!'' என்னடீ விஜி — உனக்கு யாருமே லெட்டர் போடறதில்லேன்னு தியாகுகிட்டே சொல்லிட்டயா என்ன? உள்ளூரிலேயே இருந்துகிட்டு — போனால் போகுதுன்னு உனக்கு லெட்டர் போட்டிருக்கார் பாரு!...''

மறுநாளும் அவள் ஸ்கூலுக்குள் நுழைந்தும் நுழையாததுமான நிலையில் அவள் முகத்துக்கெதிரே ஒரு கவரை நீட்டினாள் மஞ்சு!—

கடிதம் — என்றாலே பயமாயிருந்தது விஜிக்கு!— கடிதம் தியாகுவிடம் இருந்து வந்திருக்கிறது என்று மஞ்சு சொன்னதைக் கேட்டபோது — நல்லவேளை இது இன்னொரு காதல் கடிதம் இல்லை என்று ஒரு நிம்மதி படர்ந்தது மனதில்!

இப்போதும் ஒருவகை பதட்டமும் படபடப்புமாகவே அந்தக் கடிதத்தை வாங்கிக் கொண்டாள் விஜி.

தன்னுடைய மனக்குழப்பத்தின் இடையிலும் கூட விஜியின் முகம் வெட்கத்தால் சிவந்து போயிற்று. மனதில் இனம்புரியாத சந்தோஷமின்னல் வெட்டி மறைந்தது.

தியாகுவை அவள் அவ்வளவு தூரம் நேசித்தாள்! அவன் பெயரைக் கேட்டாலே மனதுக்குள் சந்தோஷம் பூத்தது.— கதைகளிலோ வேறு எங்கேயுமோ அந்தப் பெயரை சந்திக்க நேர்ந்தால் மறுநிமிஷமே அவ



னுடைய தியாகுவின் முகம் அவள் மனதுக்குள் எட்டிப் பார்த்தது!—

''இன்னும் எவ்வளவு நாளைக்கு இப்படியே காதலிச்சுக்கிட்டு இருக்கிறது விஜி? சட்டு புட்டுனு அடுத்த நடவடிக்கை வேணுமா?''— என்பான் தியாகு சில நாட்களில்!—

எவ்வளவுதான் ஆசையாக இருந்தாலும் வேகம் இருந்தாலும் அவளுடைய கட்டுப் பாட்டை மட்டும் அவன் மீறியதே இல்லை இதுவரை.

அவனை அடங்க மறுத்த சம்பவம் அன்று ஏற்காட்டில் நடந்ததுதான்!

விஜியின் நினைவுகள் சட்டென்று நின்றன. ஏற்காட்டின் நினைவு வந்ததும் மனம் முழுவதும் அந்த நினைவுப் பக்கமாய்த் திரும்பின.

நினைக்கும்போதே ஏற்காட்டின் குளிரும், இதமான ஜிலோஷ்ணமும், பார்த்த இடத்தில் எல்லாம் நிறைந்து இருந்து மனதைச் சுண்டி இழுத்த பசுமைப் போர்வையும் எல்லாமே அப்போது தன்னை ஆக்கிரமித்துக்கொண்டு விட்ட மாதிரி உணர்ந்தாள் விஜி!

''நிகழ்ச்சிகளை விடவும் நினைவுகள்தான் அதிக பலம் வாய்ந்தவையோ?'' என்று நினைத்துக் கொண்டாள்.

ஆம்! அது உண்மைதான் என்று உடனடியாகவே அவள் மனம் ஆமோதித்தது.

நேற்று நிர்மல்குமாரின் கடிதத்தைப் படித்துப் பதறிய நிகழ்ச்சி கொஞ்ச நேரமே என்றாலும் அதைப் பற்றி நினைத்து நினைத்து உருகியது அதிக நேரம் என்று தனக்குள்ளாகவே நினைத்துக் கொண்டாள்.

அன்றைக்கு ஏற்காட்டில் இருந்து திரும்பி வந்த பிறகுகூட அந்த நிகழ்ச்சியைப் பற்றி அன்றைக்கு இரவு முழுவதும் பொட்டுத் தூக்கம் இல்லாமல் என்னவெல்லாமோ நினைத்துக் கொண்டே இருந்ததும் நினைவுக்கு வந்தது.

வகுப்பறை அமைதியாக இருந்தது!

எதிரில் இருந்த மாணவர்கள் அவ்வளவு பேரும் அவளுடைய முகத்தையே ஆவலோடு பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

**குழந்தைச் செல்வம்**

**ஒரு பிடி இலந்தை மர இலையை எடுத்து பத்து மிளகு நான்கு பூண்டும் சேர்த்து நன்றாக அரைத்து மூன்று உருண்டைகளாக்கி மாதவிலக்கான முதல் நாள் ஒரு உருண்டை, இரண்டாம் நாள் ஒரு உருண்டையும், மூன்றும் நாள் ஒரு உருண்டையும் காலை நேரத்தில் சாப்பிட்டு வந்தால் குழந்தை இல்லாதவர்களுக்குக் குழந்தை பிறக்குமாம்.**

**எஸ். விஜயா சீனிவாசன்**

நிர்மல் அந்த வகுப்பில் இல்லை என்பது அவளுக்கும் தெரியும். இருந்தாலும் அங்கே உட்கார்ந்திருந்த மாணவர்கள் ஒவ்வொருவருடைய முகத்திலும் எதையோ தேடுகிறவளைப் போல அவர்களை ஒவ்வொருவராகப் பார்த்துக் கொண்டே வந்தாள் விஜி.

அவர்களில் ஒருத்தனின் முகத்திலாவது கண்களிலாவது தன்மீது விகல்பமான உணர்ச்சி தெரிகிறதா என்று தேடினாள் விஜி.

ஒருத்தனிடமும் அத்தகைய உணர்ச்சியைப் பார்க்க முடியவில்லை அவளால்.

'அவர்கள் அவ்வளவு பேருக்கும் தோன்றாத உணர்ச்சி — அவர்களில் ஒருவனாகவே இருக்கும் நிர்மல்குமாருக்கு மட்டும் எப்படி ஏற்பட்டது?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள்.

பாடப் புத்தகத்தில் எந்தக் கேள்வியைக் கேட்டாலும் டாண் டாண் என்று பதில் சொல்லிப் புரிய வைக்கிற அளவுக்குத்திறமையுள்ளவள் இன்று தன்னுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட கேள்விக்கு விடை தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தாள்!

வாயைத் திறந்து ஒரு வார்த்தை கூடப் பேசாமல் மௌனமாகவே அந்த வகுப்பை நடத்தி முடித்து விட்டதாகப் பேர் பண்ணி விட்டு அவள் வெளியேறினாள்.

காலையில் மாலா தன்னிடம் கொடுத்திருந்த தியாகுவின் லெட்டரை பிற்பகல் உணவு இடைவேளை சமயத்தில்தான் பிரித்துப்படிக்க முடிந்தது அவளால்.

நிர்மல் குமாரின் கடிதம் அளவுக்கு இல்லையென்றாலும் அவளுக்குள் பயமும் படபடப்பும் என்னவோ ஏதோ என்ற குறுகுறுப்பும் இருக்கத்தான் செய்தன.

அவள் பயத்தையும் படபடப்பையும் பொய்யாக்கி விடாமல் — ஊர்ஜிதப்படுத்துகிற மாதிரியே இருந்தது அந்தக் கடிதம்!

கண்களில் கோர்த்துக் கொண்டிருந்த கண்ணீரின் இடையில் கடிதத்தின் எழுத்துக்கள் நடுங்கி மங்கலாகத் தெரிந்தன!

வேண்டும் என்றே — அவள் மனத்தை நோகச் செய்ய வேண்டும் என்றே வார்த்தைகளைத் தேர்ந்தெடுத்து அவளைக் குத்திக் கிழிக்கிறதுபோல் அந்தக் கடிதத்தை எழுதி இருந்தான் தியாகு.

## [5]

''நிர்மல்குமார், இன்னிக்கு ஸ்கூலுக்கு வரலேங்க டீச்சர்!''

''ஏண்டா?''

''அவுங்கம்மாவுக்கு உடம்பு சரியில்லேங்க டீச்சர் – ஆஸ்பத்திரியிலே சேர்த்திருக்காங்க டீச்சர். அதனாலே அவன் வரலேங்க டீச்சர்.''

''சரி. அவங்க அம்மாவுக்கு உடம்பு சரியில்லேன்னு அவங்க அப்பா கூட்டிக்கிட்டுப் போயி ஆஸ்பத்திரியிலே சேர்க்க மாட்டாரா இவன் போயி அங்கே என்னடா பண்றான்?''

''அவனுடைய அப்பா இல்லீங்க டீச்சர். ஓடிப்போயிட்டாருங்க டீச்சர்!''

''அவங்க அப்பா ஏன் ஓடிப்போனார்?''

''அவரு ரொம்பக் கெட்டவரு டீச்சர். நிர்மல் அவங்க அம்மாவைப் போட்டு அடிப்பாரு. திட்டுவாரு. நிர்மலையும் அவன் தம்பி தங்கச்சிகளையும் போட்டு இஷ்டத்துக்கு உதைப்பாருங்க டீச்சர். குடிப்பாரு, சீட்டாடுவாரு. இன்னும் என்னவெல்லாமோ கெட்டக் கெட்ட பழக்க மெல்லாம் செய்வாருங்களாம் டீச்சர்.''

''அதுக்கு இந்த ஆளே ஏண்டா ஓடணும்?''

''தெரியாதுங்க டீச்சர். நிர்மல் அவங்க அப்பா எங்கயும் ஓடலை டீச்சர்.''

''என்னடாது. ஓடிட்டாருங்கறே. ஓடலீங்கறே எதுடா ரைட்டு? சரியாச் சொல்லு.''

''அவங்க அப்பா எங்கேயும் ஓடலீங்க டீச்சர். இங்கே தான் சாமிநாதபுரத்திலே இருக்காருங்க டீச்சர். வேறொரு அம்மா கூட இருக்காருங்க டீச்சர். நிர்மல் வீட்டுக்கு எல்லாம் அவரு வரமாட்டாருங்க டீச்சர். எங்க தெருவிலே எல்லாம் அவரு இவங்க வீட்டை விட்டு ஓடிப்போயிட்டாருன்னுதான் சொல்லுவாங்க டீச்சர்!''

''அப்போ நிர்மல் அம்மாவும், அவன் தம்பி, தங்கச்சிகளும் சாப்பிட என்னடா பண்றாங்க?''

''அவங்க அம்மா குச்சிக் கிழங்கு மாவு பேக்டரிலே வேலைக்குப் போறாங்க டீச்சர். அவங்க வீட்டிலே நிர்மலும் அவனோட ரெண்டு தம்பிகளும்தான் படிக்கிறவங்க டீச்சர்.

''ரொம்ப ஏழையாடா அவங்க?''

''ஆமா டீச்சர். நிறைய நாளு அவங்க வீட்டிலே சாப்பாட்டுக்கே ஒண்ணும் இருக்காது. எங்க வீட்டிலே வந்து பழைய சோறு ஏதாச்சும் வாங்கிட்டுப் போவாங்க டீச்சர். எங்க தெருவிலே நிறைய வீட்டிலே அப்படிப் போடுவாங்க! அவன் படிக்கப் பாடப் புத்தகமும் நோட்டும் கூட தெருக்காரங்க காசு போட்டு வாங்கித் தந்தாங்க டீச்சர்.''

''அவன்தான் மூத்த பையனா அவங்க வீட்டிலே?''

''இல்லீங்க டீச்சர். ஒருஅக்கா இருக்குது''

''அப்படியா? அது என்ன பண்ணுது. அது அவங்க அம்மாகூட வேலைக்குப் போறதில்லையா?''

''இல்லே டீச்சர். அந்த அக்கா வயசுக்கு வந்திருச்சாம். கல்யாண வயசாச்சி வெளியே வரக் கூடாதுன்னு அவங்க அம்மா அதை வீட்டோட இருக்க வெச்சுட்டாங்க டீச்சர்!

''உன் பேர் என்ன சொன்னே? துரையில்லே? ரொம்ப தேங்க்ஸ்! நீ போ. நான் பார்த்துக்கறேன்.''

''வரேன் டீச்சர்!''

''சரி.''

அவன் போய்விட்டான். மௌனமாக உட்கார்ந்திருந்த விஜியின் மனத்தில் நிர்மலின் மீது அவன் தாயாருக்கும் குடும்பத்தினருக்கும் இருக்கும் எதிர்பார்ப்பு புரிந்தது. அவனுக்காக அவர்கள் படும் பாடும் தியாகங்களும் எவ்வளவு என்பது புரிந்தது. அவை அத்தனையையும் குலைச்சிற விதமாய் அன்றைக்கு எச். எம்.மிடம் புகார் செய்து அவனுடைய எதிர் காலத்தையே வீணாக்கி விடாமல் இருந்தது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று என்ற ஆசுவாசமும் ஏற்பட்டது அவளுக்குள்.

நிர்மலின் தவறை மன்னித்து விடவும் அவள் தயாராக இல்லை. அவன் தண்டிக்கப் பட்டு விடாமல் தன்னுடைய தவறை



ஜோதிகுமார்
(17-3 புள்ளி. கடைசியில் மேலும்2வரிசை 3 புள்ளி நேர்ப் புள்ளி.)

உணரச் செய்ய வேண்டும் என்று அவள் தனக்குள் தீர்மானித்துக் கொண்டாள்.

## [6]

நீண்ட நேரமாக மணி மட்டும் அடித்துக் கொண்டே இருந்தது.

எதிர் முனையில் யாருமே ஃபோனை எடுக்கிற வழியாய் இல்லை.

விஜிக்கு ஏமாற்றமாய் இருந்தது.

ரிஸீவரை வைத்துவிட்டு எடுத்தாள்! டயல் டோன் வருகிற வரை பொறுமையுடன் காத்திருந்து விட்டு ஒவ்வொரு எண்ணாக மிகவும் நிதானமாகச் சுழற்றினாள்.

''எஸ் — த்ரீ ஸீரோ செவன் ஸீரோ டபிள்!''

''ஹலோ! அங்கே மிஸ்டர் தியாகு இருக்கிறாரா? நான் அவர் கூடக் கொஞ்சம் அவசரமாகப் பேசணுமே!''

''ஜஸ்ட் எ மினிட்... தியாகு! உனக்கு போன்று....''

' போன் கை மாறும் சப்தமும் அடுத்து ''எஸ் தியாகு ஹியர்'' என்ற தியாகுவின் குரலும் கேட்டன.

'சட்'டென்று இனம் புரியாத மௌனம் என்று திடீரென்று தன்னைக் கவ்விக் கொள்ள என்ன பேசுவது என்று தெரியாமல் ஒரு கணம் மௌனமாகி இருந்தாள் விஜி.

''எஸ் தியாகு ஸ்பீக்கிங்'' — என்று குரல் மிரட்டியது!

''நான் விஜி பேசறேன்!''

''ம்... என்ன வேணும்?''

''நீங்கதான்!''

''போன்லேயே போதுமா?''

''குரல் சூடாகவே இருக்கே! இன்னும் கோபம் தீரலையா?''



என்: குப்பம்மாள்
(15-8 புள்ளி)

''இது கோபம் இல்லே. வெட்கம், அவமான ஏமாற்றம், எக்ஸ்ட்ரா எக்ஸ்ட்ரா!''

''இதெல்லாம் எதுக்கு?''

''உனக்கே தெரியும். தெரியாவிட்டாலும் தெரிந்து கொள்ளட்டும் என்றுதான் லெட்டரும் போட்டிருந்தேன்!''

''படிச்சேன்.''

''படிச்சுட்டுமா கேட்கிறாய். திமிரா?''

''இல்லே. அன்பு — ஆறுதல் — அனுதாபம் எக்ஸ்ட்ரா எக்ஸ்ட்ரா!''

''எனக்கு எதுவுமே தேவையில்லே!''

''நிஜமாகவா?''

''ஷ்யூர்!''

''அப்போ போனை வைச்சிடட்டுமா?''

''டக்!'' — எதிர் முனையில் போன் வைக்கப்பட்டு விட்டதை உணர்ந்து ஒரு கணம் திக்பிரமை பிடித்துப் போய் விட்டாள் விஜி.

அவன் இவ்வளவு இறுக்கமாய் இருப்பான் என்று அவள் எண்ணவே இல்லே. எவ்வளவு கோபம் இருந்தாலும் தன்னுடைய குரலைக் கேட்ட பிறகாவது 'அவனுடைய கோபம் அத்தனையும் தணிந்து போய் சமாதானமாகி விடுவான் என்று நம்பிருந்தாள் அவள். ''போன வாரம் வழக்கம் போலத் தன்னைச் சந்திக்க ஏன் வரவில்லே!'' என்று அவனிடம் கேட்கவும் கொஞ்சம் பொய்க் கோபம் கொண்டு சிணுங்கி அவனைத் தன்னிடம் கெஞ்ச வைக்கவும் எண்ணியிருந்தாள் அவள். அன்றைக்கு ஏற்காட்டில் அவன் இச்சைக்கு இணங்க மறுத்தது அவன் கடிதத்தில் எழுதியிருந்த மாதிரி அவன் மீது அவநம்பிக்கையாலோ அல்லது அவன் தன்னை ஏமாற்றிக் கைவிட்டு விடுவான் என்ற பயத்தினாலோ அல்ல என்பதைப் பொறுமையாக அவனுக்கு எடுத்துக் கூறி அவனைக் கன்வின்ஸ் பண்ண வேண்டும் என்று கூட எண்ணியிருந்தாள்! அப்போதும் அவன் சமாதானம் அடையவில்லையென்றால் அவனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு அவனுடைய கோபத்தை மாற்றி வழக்கம் போல் அவன் தன்னை வந்து சந்திக்கவும் பேசவும் வைக்க வேண்டும் என்றும் தீர்மானித்துக் கொண்டிருந்தாள்.

அவன் இப்படித் திடீரென்று ஒரேயடியாக 'டெலிபோனையே 'கட்' பண்ணி விட்டுப் போய்விடுவான்' என்று அவள் எதிர்பார்க்கவில்லே.

அவன் தன்னுடைய கடிதத்தில் எழுதியிருந்த மாதிரி — அவளுடைய காதல் மீதே சந்தேகத்துடன் இருக்கிறான் என்பது நிதர்சனமாகத் தெரிந்தது அவளுக்கு!

விஜியின் மூடிய கண்களுக்குள் தியாகுவின் கடிதம் வார்த்தை வார்த்தையாக விரிந்தது.

நழுவிய மனத்தைச் 'சட்'டென்றுஇறுக்கிப் பிடித்துக் கடிவாளமிட்டாள்!

இன்னும் ஒரு முறை போன் செய்து பேசலாமா என்று நினைத்தாள்.

'மீண்டும் அவன் அப்படியே பேசிஅப்படியே நடந்து கொண்டால், தன்னால் நிச்சயம் தாங்க முடியாது' என்று நினைவு வந்தது.

பேசாமல் வெளியே வந்தாள்.

இரவு — ஹாஸ்டல் மொட்டை மாடியில் வந்து உட்கார்ந்து கொண்டு நட்சத்திர வானத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்த அவள் மனத்தில் எவ்வளவோ எண்ணங்கள் குப்பல் குப்பலாக எழுந்து அடங்கிக் கொண்டிருந்தன!

ஒரு பக்கம் நிர்மல்குமார் 'அடோலஸென்ட்' காதல்! மறுபுறம் தியாகுவின் ஒரு 'அடல்ட்'டின் பிடிவாதம்! — அவள் மனம் வலித்தது.

காதலைப் பற்றி ஒன்றுமே தெரியாமல் இரண்டும் கெட்டான் தனமாக — வயதின் பருவக் கிளர்ச்சியால் தன்னுடைய நிலைமை, வயது பொருத்தம், தன்னுடைய எதிர்காலம் இவை எதையும் பற்றிக் கவலைப் படாமல் தனக்கு ஒரு காதல் கடிதம் எழுதிய நிர்மலும்—

'காதல் என்பது எப்போது வேண்டுமானாலும், எதை வேண்டுமானாலும் செய்கிற — கேட்கிற — எடுத்துக் கொள்கிற உரிமை'' என்று தவறாக எண்ணிக் கொண்டு அடுத்தவர்களின் மனத்தையும், உணர்ச்சிகளையும் அபிப்பிராயத்தையும் பற்றிக் கவலைப் படாமல் முரட்டுத்தனமான பிடிவாதமும் கோபமாகவும் இருக்கும் தியாகுவும்—

ஒரே விஷயத்தின் இரண்டு முகங்களாக அவளுக்குத் தோன்றினார்கள்.

இன்னும் கொஞ்சம் ஆழமாக யோசித்துப் பார்த்தபோது அவர்கள் இருவரும் ஒரே தட்டில் இருக்கிற மாதிரி தோன்றியது.

அவர்களுக்குள் அதிக வித்தியாசம் இருக்கவில்லை என்று நினைத்துக் கொண்டாள். யோசித்து யோசித்து அன்று முழுவதும் அவள் தூங்கவே யில்லை.

**[7]**

**"கூ**ப்பிட்டீங்களா டீச்சர்!''

ஆசிரியர்கள் ரெஸ்ட் ரூமில் தனியாக உட்கார்ந்து கையில் ஒரு புத்தகத்தை வைத்துக்கொண்டு அதைத் தீவிரமாகப் படிக்கிற பாவனையில் இருந்த விஜியின் காதுகளில் நிர்மல்குமாரின் குரல் கேட்கவே செய்தது!

மணி நாலரைக்கு மேலே ஆகிவிட்டிருந்தது! ஸ்கூல் முடிந்து எல்லோரும் போய் விட்டிருந்தார்கள்.

'சட்'டென்று தலையைத் திருப்பி அவனைப் பார்த்த விஜி ''ஓ நீங்களா?'' என்றாள்.

அவளுடைய ''நீங்களா?'' என்ற அந்த வார்த்தையில் தொனித்த விசேஷ அழுத்தத்தை நிர்மல் குமாரும் கவனித்தான்.

உடனே அவன் கையும் காலும் இனம் புரியாமல் தந்தியடிக்கத் துவங்கிவிட்டன!

மெதுவாக அவனை நோக்கி இரண்டடி நடந்தாள். பயத்துடன் நிர்மல் இரண்டு எட்டு பின்னால் நகர்ந்து கொண்டான்.

''இந்த லெட்டரை நீதான் எழுதினாயா?''

கைப்பையில் இருந்து கசங்கிய அந்தக் கடிதத்தை எடுத்து அவனுடைய முகத்துக்கு எதிரே நீட்டினாள் விஜி. அவனுடைய முகமும் உடம்பும் ஒரு விநாடியில் ''குப்'' பென்று வியர்த்து விட்டது. கைகால்கள் தந்தியடித்தன. கண்கள் மிரள மிரள விழித்தன.

''இது... இது... டீச்சர்... வந்து...'' —வாய் குழறியது.

''டீச்சரா? நானா? — நான் உன் லவ்வர் இல்லையா? — சரி... நம்ப கல்யாணம் எப்போ?'' — விஜி கொஞ்சமும் பதற்றமில்லாமல் மிகவும் நிதானமாக — இயல்பை விட மெல்லிய குரலில் கேட்டு அவனை ஊடுருவிப் பார்த்தாள்.

''டீச்சர்!'' — என்று பதறினான் அவன்.

''என்ன? லெட்டர் எழுதறப்போ இருந்த தைரியம் இப்போ எங்கே போயிருச்சு... நம்ப கல்யாணம் எப்போ வைச்சுக்கலாம்? வீடு வாசல் எல்லாம் பார்த்துட்டியா? லாரி பார்த்துட்டீங்களா? நாளைக்குக் கல்யாணம் ஆயிட்ட பிறகு எனக்கு சாப்பிட, புடவை வாங்க, நாம குடியிருக்க பணம் காசு நிறைய வேணுமே! அதுக்கு எல்லாம் ஏற்பாடுசெய்து வைச்சிருப்பீங்கன்னு எனக்குத் தெரியும். மாசம் எவ்வளவு சம்பளம் வரும்? எப்படி எல்லாம் செலவு பண்ணலாம்? இப்பவே ஒரு கணக்குப் பார்த்து வைச்சுக்கிட்டா உங்க லெட்டருக்கு நான் ஒரு உறுதியா பதில் சொல்ல முடியும்! — என்ன சொல்றீங்க?...''

''டீச்சர்....''

''என்னங்க!''

'' ''



—ஜோதிகுமார்

(19-5 புள்ளி. கடைசியில் மேலும் 4 வரிசை 5 புள்ளிகள் நேர்ப்புள்ளிகளாக.)

''என்னங்க! நம்ப கல்யாணம் எப்ப?''

நிர்மல்குமாரின் உடம்பு சுத்தமாக நடுங்கத் தொடங்கி யிருந்தது. ஜுர வேகமாய் உஷ்ணம் உடம்பெல்லாம் ஓடியது. கண்களில் கரகரவென்று கண்ணீர் வழிந்தது.

''அது எப்படிங்க... என்னை நீங்க உயிருக்கு உயிரா நேசிக்கிறீங்களா? நான் இல்லாம உங்களால இருக்க முடியாதா? ராத்திரி தூங்க முடியாம அவஸ்தைப் படுத்தறேனா? போனால் போகட்டும். நீங்க இப்படியெல்லாம் சிரமப்படறது எனக்குத் தாங்கலே யில்லை. அதனாலதான் கேட்கறேன். இப்போ சொல்லுங்க... நம்ப கல்யாணத்தை எப்போ வைச்சுக்கலாம்? உங்க கிட்ட அதைப் பேசி முடிவு பண்ணிடலாம்னுதான் உங்களை வரச் சொன்னேன்.''

''ஓ''வென்று கதறிவிட்டான் நிர்மல். தலைக்கு மேலே கைகளைத் தூக்கிக் கும்பிட்டபடி அவள் கால் பக்கம் நெடுஞ்

சான் ஒடையாகக் கீழே விழுந்தான்!

''என்னே மன்னிச்சுடுங்க டீச்சர்! ஏதோ புத்தி கெட்டுப் போயி உங்களுக்கு இப்படி யொரு லெட்டரை எழுதிட்டேன். நீங்க நினைச்சிருந்தா என்னே என்னவேணும்னாலும் செய்திருக்கலாம். இந்தப் பள்ளிக்கூடத்தி லேருந்தே சீட்டுக் கிழிச்சு என்னே வெளியே அனுப்பி யிருக்கலாம்! நான் செஞ்ச தப்புக்கு அது சரியான தண்டனையாகவும் இருந் திருக்கும். இப்போ நீங்க பேசப் பேச என்னைச் சித்திரவதை செய்யற மாதிரி இருக்கு டீச்சர். அதுவே எனக்குச் சரியான தண்டனைதான்! என்னே மன்னிச்சிடுங்க டீச்சர்!'' என்றான். — குரல் தழுதழுத்துப் புலம்பியது. அழுகைக்கு நடுவில் விக்கல் எடுத் தது. கண்கள் சிவந்து போயிற்று. வெட் கத்திலும் அவமானத்திலும் அவன் உடம்பே கூசிக் குறுகிப் போய் நின்றிருந்தான் அவன்.


என். குப்பம்மாள்
(11-6 புள்ளி)

''அது மட்டும் அல்ல — நிர்மல்! நீ நன் ருகப் படிக்கிற பையன். உன் எதிர்காலம் பாழாகக் கூடாது என்கிற நல்ல எண்ணத் திலேதான் உன்னேப் பத்திப் புகார் செய் யாமல் விட்டேன். நீ இன்னும் நிறையப் படிக்க வேண்டும். நல்லா முன்னுக்கு வர வேண்டும். உன்னேயே எதிர்பார்த்துக் காத் திருக்கும் உங்க அம்மா — கல்யாண வயசைத் தாண்டிவிட்ட உங்க அக்கா — தம்பி — தங் கைகள் எல்லாருக்குமே நீதான் நம்பிக்கை நட்சத்திரம். நீ அவர்கள் எதிர்பார்த்தபடி அமையா விட்டால் அவர்கள் வாழ்க்கையே பாழாகி விடும். 'நான் சொன்னதெல்லாம் புரிகிறதா? இந்த யெல்லாம் நன்ருக யோசித்துப் பாரு. இனிமேலாவது ஒழுங் காகப் படி!''

விஜி கசங்கிய அந்தக் கடிதத்தை அவன் மேல் வீசி எறிந்தாள்.

குனிந்து அதை எடுத்துக் கொண்ட நிர்மல் கையெடுத்துக் கும்பிட்டான்.

''நீ நினேக்கிற மாதிரி காதல் என்கிறது ஒரு கடைச் சரக்கு இல்லே. கேட்டவனுக்கு எல்லாம் கிடைக்கிறதற்கு! அது எல்லாம் உனக்குப் புரிய நாளாகும். கண்டபடி மனசைச் சிதற விடாமல் இனிமேலாவது ஒழுங்காக இருக்கணும். என்ன?''

''சரி டீச்சர்!''

''போ!''

அவன் தலையைத் தொங்க விட்டபடி போவதைப் பார்த்துக் கொண்டிருந்த விஜியின் மனதுக்குள் காதல் கடைச் சரக்கல்ல! கேட்டவனுக்கெல்லாம் கிடைக் காது என்று அநிச்சையாகத் தான் சொல்லி யதை பற்றியே எண்ணம் திரும்பத் திரும்ப வந்து கொண்டிருந்தது.

## [8]

நிர்மல்குமாரை — தான் நினேத்தபடி ஒரு அதிர்ச்சி வைத்தியத்தில் குணப்படுத்திவிட்ட மகிழ்ச்சியுடன் ஹாஸ்டலுக்கு வந்த விஜி யின் கண்கள் அறையில் இருந்த காலண் டரைப் பார்த்ததும் மனதில் மகிழ்ச்சிகள் அவ்வளவும் அப்படியே வற்றிப் போய் விட்டன.

கண்கள் அன்றைய கிழமையிலேயே குத் திட்டுப் போய் நின்றிருந்தது. வழக்கமாக தியாகு வரும் கிழமை அது! வாரா வாரம் வருவான். அன்றைக்கு அவனுக்கு லீவு. நிச்சயம் அவளேப் பார்க்க வருவான்.

இன்று—

அவன் டிராமுகமாக இருப்பதை அவ ளால் பொறுத்துக்கொள்ளத்தான் முடிய வில்லே.

நிர்மலேத் திருத்தின மாதிரி அவனேயும் மாற்றுவதற்கு என்ன செய்வது என்று ஒரு வழியும் தோன்ருமல் வெகு நேரம் காலண் டரைப் பார்த்தபடியே உட்கார்ந்திருந்தாள்!

மாலே மயங்கி இருள் சூழத் துவங்கிய பிறகும் கூட நம்பிக்கையுடனேயே அவள் காத்திருந்தாள்.

ஆனல்—

அவன்தான் வரவேயில்லே.

இரவு வெகு நேரம் வரை தூங்காமல் புரண்டு கொண்டிருந்தவள், 'சட்'டென்று எழுந்து உட்கார்ந்து எழுதத் துவங்கிஞள்.

அன்புள்ள தியாகு...

உங்கள் கோபம் வளர்ந்து வெறுப்பாகி இருக்கிறது என்று நினேக்கிறேன். தியாகு! கோபத்தைச் சமாதானப் படுத்தலாம். வெறுப்பை அவ்விதம் செய்து அடக்கிவிட முடியாது!

சரி. அந்த வெறுப்புக்கு என்ன கார ணம் தியாகு?

நான் அன்றைக்கு உங்கள் ஆசைக்கு உடன்பட மறுத்ததா? — அது மட்டும் தான் காரணமாக இருக்க முடியும். ஏனென்றால் அதிலிருந்துதான் உங்கள் கோபமே துவங்கிற்று. அப்படியென்றால் உங்கள் காதல், நேசிப்பு இவை எல்லாவற்றுக்கும் மையப் புள்ளி 'உடம்பு'தானா தியாகு! உங்கள் காதலின் நோக்கமும் இறுதி எல்லையும் உடம்பு மட்டும்தானா?

ப்ளீஸ் என்னை மன்னித்து விடுங்கள். இந்த நிமிஷம் வரையிலும் கூட அன்றைக்கு நான்செய்ததுதவறு என்று எனக்குத் தோன்றவே யில்லை. — உங்கள் திடீர் ஆசைக்கு இணங்க மறுத்ததற்காகவும், உங்கள் கோபத்தைக் கண்டு பயந்து விடாமல் உறுதியாக இருந்ததற்காகவும் வருத்தப்படவில்லை நான். மாறாக பெருமையே தோன்றுகிறது.

அது ஏன்?—

இளகவே விரும்பாமல் இறுகிப் போய் விட்டீர்களா தியாகு? காம்ப்ரமைஸ் பண்ணிக் கொள்ளாமல் இந்த உலகத்தில் வாழவே முடியாது என்பீர்களே — இதிலே ஏன் பண்ணிக் கொள்ள முடியவில்லை காம்ப்ரமைஸ்!—

இரண்டு வாரங்களாக பிரச்னைக்கு மேல் பிரச்னைகள் தியாகு. — நல்ல தூக்கம் இல்லை. நிறைய யோசித்தேன். நிறைய வருத்தப்பட்டேன்.

பிரச்னைகளின்போது உங்கள் துணையும் ஆறுதலும் இருந்தால் மிகவும் நன்றாக இருக்கும் என்று தேடினேன். ஆனால் தியாகு—

நீங்களே எனக்கு ஒரு பிரச்னையாக ஆகிவிடுவீர்கள் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை!

வெல்!—

அதுவும் கூட நல்லதற்குத்தான் என்று வைத்துக் கொள்ளுங்கள்! பிரச்னை என்று வந்து விட்டால் காதைப் பொத்திக் கொண்டு காத தூரம் ஓடாமல், தைரியமாக அதை நேருக்கு நேர் சந்திக்கிற தைரியம் வந்திருக்கிறது தியாகு.

அதுவே ஒரு லாபம்தானே?

சரி. உங்கள் கடிதத்தில் நான் உங்களை நம்பவில்லை என்றும், நீங்கள் ஏமாற்றி விடுவீர்கள் என்று பயப்படுவதாகவும் எழுதி, என் அன்பையும் நம்பிக்கையையும், கேவலமாகக் கொச்சைப்படுத்த உங்களுக்கு எப்படி மனம் வந்தது தியாகு!

நீங்கள்தான் என்னை நம்பவில்லை புரிந்து கொள்ளவில்லை. — என்று நானும் பதிலுக்கு உங்கள் மீது குற்றம் சாட்ட விரும்பவில்லை தியாகு. அப்படி பரஸ்பரம் நாக்குள் குற்றம் சாட்டி நிரூபித்து ஆக வேண்டியதென்ன தியாகு?

காதல் என்பது காத்திருத்தல்! தானாகக் கனிய வேண்டிய பழம் அது! அதைத் தடியால் அடித்துக் கனிய வைக்க முடியாது. வைக்கவும் கூடாது. காத்திருக்கத் தான் வேண்டும். கால் வலிக்கத்தான் செய்யும். கோபம் வரலாம். வெறுப்பு கூடாது என்று எனக்குத் தோன்றுகிறது.

அப்படி ஒரு உடம்பின் தேவைக்காக மனசின் காதல் செத்து விடும் என்பதை என்னால் இன்னமும்கூட நம்ப முடியவில்லை தியாகு!

அப்படி நடந்து விடாது என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

அதையும் மீறி, நம்மைப் பொறுத்த வரையில் இந்தக் காதல் உடம்புக்காகவே செத்துப் போயிற்று என்றாலும் — எனக்கு இனிமேல் வருத்தம் ஏற்படப் போவது இல்லை தியாகு!

வெய்யில் காலம் அல்லவா? 'வற்றல் காலம் ஆச்சே. இதோ சுலபமான புதுமாதிரியான வற்றல்கள்:—

**ஜவ்வரிசி முறுக்கு:-**

அரை கிலோ ஜவ்வரிசி
அரை கிலோ உருளை கிழங்கு
ஒரு ஸ்பூன் சீரகம்.

செய்முறை:—

3 கப் சுத்தமான ஜவ்வரிசியில் 4 கப் கொதிக்கிற வெந்நீர் ஊற்றி இரவில் வைத்து விடவும். மறுநாள் காலையில் அரை கிலோ உருளை கிழங்கை வேக வைத்துத் தோல் உரித்து நன்றாக மசிக்கவும். மாவு போல அரைக்கவும். அதில் தேவையான உப்பு, பெருங்காயம், சீரகம், போட்டு, நன்றாக ஊறின ஜவ்வரிசியை போட்டு அதில் பிசையவும். ஜவ்வரிசி நன்றாக மாவுபோல ஆகிவிடும். இதை முறுக்கு குழலில் இட்டு வட்டமாக பிழியவும். காய்ந்த பின் பொரித்தால் மிகவும் ருசியாக இருக்கும். வருடம் முழுவதும் இருக்கும். கெட்டுப் போகாது. திமர் 'டிபன்' ஆகும். வேண்டுமெனில் 5 கப் நீர் சேர்க்கலாம். ஜவ்வரிசியின் தன்மையைப் பொறுத்தது.

—பிரா

எனக்குக் கால்கள் இன்னும் வலிக்கத் துவங்கவில்லை. நான் காத்திருக்கிறேன்..

இப்படிக்கு உங்கள்
அன்புள்ள விஜி

என்று எழுதி முடித்தபோது அவள் மனதின் கனமெல்லாம் இறங்கி மனம் லேசாகி விட்டதைப் போலிருந்தது.

திருப்தியாகப் பெருமூச்சு விட்டபடி அவள் மீண்டும் படுக்கையில் விழுந்தாள்.

அன்று இரவு
அவள் நிம்மதியாகத் தூங்கினாள்.

(வளரும்)

# பரிசு பெற்ற கட்டுரைகள்

## இப்படித்தான் குடும்பத்தைச் சிறப்பாக நடத்துவேன்

நான் திருமணமான பிறகு, எப்படியெல்லாம் நடந்து கொள்ள வேண்டும் என்பதற்கு என் சகோதரிகளும் என் தாயும் தங்கள் மணவாழ்வில் நடந்து கொள்ளுவதிலிருந்தே பல படிப்பினைகள் எனக்குக் கிடைத்து விட்டன.

பல விஷயங்களில், முக்கியமாக, எப்படியெல்லாம் நடந்து கொள்ளக் கூடாது, என்பதுதான் பெரிய விஷயம்.

முதன் முதலில் புக்ககத்து மனிதர்களைப் புரிந்து கொள்ள சந்தர்ப்பங்கள் கிடைக்கவே சில மாதங்களாகின்றன.

கணவனது குணங்களையும், அவரது செய்கைகளையும் புரிந்து கொண்டுவிட்டால், பின் எல்லாம் எளிது. ஆனால் அதற்கும் அவர் இடம் கொடுக்க வேண்டும் அல்லவா?

. காதலித்துத் திருமணம் செய்து கொண்டால் அவரது குணநலன்கள், ஈடுபாடு, விருப்பு, வெறுப்பு, பழக்க வழக்கங்கள்



பற்றி ஓரளவு புரிந்து கொள்ள நிறைய வாய்ப்புக்கள் இருக்கின்றன.

ஆனால், நான் பெற்றோர் பார்த்து வைக்கும் மணமகனைத் தான் ஏற்றுக் கொள்ளப் போகிறேன்.

என்ன இருந்தாலும், என்னுடன் ஒப்பிடும் போது பெரியவர்களது அனுபவம், தீர்மானிக்கும் திறன், பிரச்சினைகளைச் சமாளிக்கும் திறன், பக்குவம் ஆகியவை, நிச்சயம் சிறந்ததாகத் தான் இருக்கும். தவிர, பெற்றோர்கள் என் நன்மையை உத்தேசித்துத்தானே ஒவ்வொரு விஷயத்தையும் அணுகுவார்கள்! என் பெற்றோர் என் இரண்டு சகோதரிகளுக்கும் எத்தனை அறிவுரை கூறியிருக்கிறார்கள்? அவற்றை எல்லாம் நினைவு கூர்கிறேன்.

முன்பின் அறிமுகமில்லாத அல்லது சிறிதும் தொடர்பே இல்லாத குடும்பத்தில் நான் சந்திக்கப் போகும் பிரச்சினைகள் — முக்கியமாகப் பெண்ணுக்கு அடிப்படி விஷயமும் நிர்வாகமும் தான்.

புதுமனைவி வந்தால், 'மகன் குடும்பத்தை மறந்து மனைவி கைப்பாவையாகி விடுவானோ தங்களை மறந்து விடுவானோ?' என்ற பயம் பெற்றோருக்கும், தங்களிடம் உள்ள பிரியத்தையும் தங்களுக்குச் செய்யும் செலவுகளையும் குறைத்து விடுவானோ?' என்ற பயம் சகோதர சகோதரிகளுக்கும் சாதாரணமாக ஏற்படும். அதுவும் கூட்டுக் குடும்பமாக இருந்தால் இதற்கு வாய்ப்புகள் அதிகம். எனவே மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். 'நமக்குப் போட்டியாக இவள் எல்லாவற்றிலும் பங்கு போட்டுக் கொள்ள வந்து விட்டாளே' என்று அவர்கள் நினைக்கச் சந்தர்ப்பமே கொடுக்க மாட்டேன். மாறாக என் வரவையும், நான் அவர்களுடன் இருக்கும் ஒவ்வொரு நிமிடத்தையும் அவர்கள் வரவேற்கும்படி நான் என்னைத் தயார் செய்து கொள்வேன்.

திருமணத்துக்குப் பின்னர், என் பிறந்தகத்துக்கு நான் பண உதவி செய்யவேண்டிய அவசியம் இல்லையாதலால், பொறுப்பான மனிதராக இருந்தால், வரவு செலவு எல்லாவற்றையும் என் கணவரது தலையில் ஏற்றி விடுவேன். இது என் பெரிய சகோதரியிடம் நான் கற்றபாடம். ஐந்து பைசா வரவானாலும் கணவரிடம் கொடுத்து விடுவாள். பின் ஐந்தாயிரம் ரூபாய் செலவுக்கு வழி வைத்தாலும் அவர், அவள் முதலில் வைத்த ஐஸில் உருகியிருப்பார்.

என் சின்ன அக்கா ரொம்பவும் 'சென்ஸிடிவ்' டைப். யாராவது ஏதாவது சொல்லி விட்டால் உடனே முகம் வாடி விடுவாள். அந்த வருத்தத்தில் அடுத்த வேலை செய்யும் 'மூடு' போய்விடும். அப்படியே இடிந்து போய் விடுவாள். பெரியக்கா அப்படியில்லை. அவளைக் கேலி பேசினாலும், திட்டினாலும், குறை கூறினாலும், சிரித்துச் சிரித்தே வாழைப் பழத்தில் ஊசி ஏற்றுவது போல 'உறைக்கும்படி' பதிலும் கொடுத்துவிட்டு 'ஸ்போர்ட்டிவ்வாக' — எதுவுமே நடக்காதது போல், தொடர்ந்து செயலாற்றிக் கொண்டிருப்பாள். ரொம்பவும் சிரியஸானால்தான், சற்று உறுதியுடன் நிலைத்து நிற்பாள். அடிப்படையாக, பொறுமை, விடாமுயற்சி கொஞ்சம் விட்டுக் கொடுத்து, நிறைய சாதித்துக் கொள்ளுதல், புகழ்ந்துபுகழ்ந்தே பிறரை வேலை வாங்குதல் ஆகியவைதான் அவளது ஆயுதங்கள்.

பெரியக்காவின் வழி எனக்கும் ஏற்றதாக இருக்கும் என்று நினைக்கிறேன்.

❀ பிரசுரத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவை ❀

ஆரம்பத்தில் சிறிது கஷ்டமாக இருந்தாலும், நாளடைவில் நமக்குச் சாதகம் ஏற்படும்.

கடன் வாங்கி ஆடம்பரமாகச் செலவழிப்பது, வரவுக்கு மீறி செலவு செய்வது, தகுதிக்கு மீறிச் செய்வது ஆகியவை என் புக்கக மனிதர்களிடையே இருந்தாலும் நான் மிகவும் ஜாக்கிரதையாக ஒதுங்கிவிடுவேன். இயன்றவரை, என் கணவரையும் புரிந்து கொள்ள வைப்பேன். இயலாவிட்டால், என் குழந்தைகளுக்கு இந்தப் பழக்கங்கள் எட்டவே கூடாத தொலைவில் ஒதுங்கி விடுவேன்.

கடைசியாக — எதிலாவது பிரச்சினை ஏற்பட்டால், என்னை வட்டத்துக்கு வெளியே நிறுத்திக் கொண்டு, மூன்றும் மனிதர்களுக்கு நடுவே நிலையாகத் தீர்ப்பு வழங்கும் நீதிபதி போல் யோசித்துப், பிறகு செயல்படுவேன்.

**டாக்டர் மைதிலி.** சிதம்பரம்

## நான் கொடுத்து வைத்தவள்

எனது திருமணம் பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு முன் நடந்தது. எனது வீட்டில் பன்னிரெண்டு பவுன் போடுவதாக பேச்சு. ஆனால் எனக்குப் போட்டது பத்துப் பவுன். திருமணம் முடிந்து மறுவீடு அழைத்த பொழுது என் கணவர் என் தந்தையிடம் 'என்னென்ன நகை போட்டுள்ளீர்கள்?' எனக் கேட்டுள்ளார். அதற்கு என் தந்தை 'எல்லாம் போட்டுக் கொண்டு வருவாள் பார்த்துக் கொள்ளுங்கள்' என இடக்காக கூறி விட்டார். இது எனக்குத் தெரியாது. என் கணவர் வேலை பார்க்கும் ஊரில் ஒரு வாரத்தில் தனிக் குடித்தனம் வைத்து விட்டார்கள். துணைக்கு எனது மாமியார் இருந்தார். அவர் ஒரு அப்பாவி. எந்தப் பேச்சுக்கும் வரமாட்டார். என்னைத் தன் மகளை விடவும் கவனித்துக் கொண்டார்.

ஊருக்கு வந்த பின் என்னை என் கணவர் கேட்டார். எத்தனை பவுன் நகை இருக்கும் நீ போட்டிருப்பது என்று. நான் பத்துப் பவுன் தான் இருக்கும் என்றேன். இதற்குத் தான் நான் ஊரிலேயே உன் தந்தையிடம் கேட்டேன். அவர் இப்படிக் கூறினார் என விளக்கியவுடன் எனக்கு அழுகை வந்து விட்டது. நான் அழுததும் அவர் ''சே, சே, இதுக்கு நீ ஏன் அழுகிறாய்? உங்க அப்பா அம்மா உனக்குப் போடுகின்றார்கள். தன் மகளுக்கு தானே செய்கின்றோம் என்ற அன்போடு செய்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். யாருக்கோ செய்வது போல் செய்ததை நினைத்தால் தான் எனக்குக் கஷ்டமாக உள்ளது'' எனக் கூறி வருந்தினார்.

அதன்பின் பத்து நாள் கழித்து சீர் கொண்டு வந்து கொடுத்தார்கள். நானும் எத்தனையோ கல்யாண வீட்டில் பார்த்திருக்கிறேன். விதவிதமான பாத்திரங்களையும், பளபளக்கும் வெள்ளிச் சாமான்களையும். ஆனால் எனக்கு வந்ததோ ஐநூறு ரூபாய்க்கு கூடத் தேறாது. அதைப் பார்த்ததும் என் கணவரும், என் அத்தையும் ஒன்றும் கூறவில்லை. ''வாழ வந்த மகளுக்கு இந்த பாத்திரங்களையெல்லாம் விட ஒரு குத்து விளக்கு மட்டும் கொடுத்திருந்தால் நான் சந்தோஷம் அடைந்திருப்பேன்'' என்று மட்டும் கூறினார். பிறகுதான் நான் கவனித்தேன். குத்துவிளக்கே இல்லையென்று. அப்பொழுதும் அழுதேன். அதற்கும் அவர் கடிந்து கொள்ளாமல் ''உனக்கு வேண்டிய பொருள்களை நான் வாங்கித் தருகிறேன். நீ அழாதே!'' என்றுதான் கூறினார்.

அடுத்த வருடமே தலைப்பிரசவம். அதற்கு அழைத்துச் சென்று கவனித்தார்கள். பெண் குழந்தை பிறந்தது. பிறந்து மூன்றும் மாதம் என் கணவர் அழைத்து போவதற்கு வந்தார். என் வீட்டில் குழந்தைக்கு ஒரு சட்டை கூட போடவில்லை. என் கணவர் இது இப்படித்தான் நடக்கும் என அறிந்தவர் போல் இரண்டு மோதிரம், கொலுசு, கவுன் என்று வாங்கிக் கொடுத்து என்னை அழைத்துச் சென்றார். அப்பொழுதும் அழுதேன். அதற்கு அவர் 'இது நமக்கு முதன் முதலில் பிறந்த குழந்தை. என் குழந்தைக்கு நான் தான் செய்யவேண்டும். உனக்கே உன் பெற்றோர் செய்ய தயங்கும் போது என் குழந்தைக்கு எப்படி செய்வார்கள்? இதற்கெல்லாம் மனதைப்போட்டு அலட்டிக் கொள்ள வேண்டாம்'' எனக்கூறி என்னை மகிழ்ச்சியில் ஆழச் செய்தார்.



மூன்றும் வருடம் நடந்த என் தங்கையின் கல்யாணத்தில் இத்தனைக்கும் வட்டியும், முதலுமாக பிள்ளை வீட்டார் பிடுங்கி எடுத்து விட்டனர். ஆனால் எனக்கோ, மாப்பிள்ளைக்கோ ஒரு துணிமணிகூட கிடையாது. நான் அழுவதைப் பார்த்துக் கணவர் மறுநாளே கூட்டிக் கொண்டு போய் விட்டார்.

அன்றிலிருந்து இன்று வரை என் தாய் வீட்டிலிருந்து ஒரு பிட் துணி கூட எனக்கு எடுத்ததில்லை. என் கணவர் அதைப்பற்றி ஒரு வார்த்தை என் மனம் புண்படும்படி கூறியதும் இல்லை. விடுமுறைக்கு ஊருக்குச் சென்றாலும் இருநூறு, முன்னூறு என்று என் செலவுக்குக் கொடுத்து அனுப்பிவைப்பார். எனக்கு சந்தோஷம் என் கணவருடன் இருப்பதுதான். இருந்தாலும் விடுமுறை என்று வந்துவிட்டால் குழந்தைகளுக்காக வெளி இடங்களுக்குச் செல்ல வேண்டி இருப்பதால் வேறு எங்கும் செல்வதைவிட என் தாய் வீட்டிற்குச் சென்று எங்களுக்கு என்று ஆகும் செலவைக் கொடுத்துவிட்டு சந்தோஷமாக இருப்பதாக நடித்துவிட்டு வருகின்றோம். உலகத்தில் கணவன்மார் கொடுமை, மாமியார் கொடுமை என்று பேப்பரில் படிக்கும் பொழுது எனக்கு இப்படி ஒரு கணவர் கிடைத்தது என் முன்னோர் செய்த புண்ணியமா, இல்லை நான் பூர்வ ஜென்மத்தில் செய்த பூஜாபலனோ என்று எண்ணி வியக்கத்தான் தோன்றுகிறது.

செல்விகனகராஜன் காளையார் கோவில்

## கல்விக் கண்ணைத் திறந்தேன்!

ஈரெட்டு வயதினிலே பள்ளிப் படிப்பை முடித்துக் கல்லூரியில் காலடி எடுத்து வைத்த சமயம் நல்ல வரன் வந்திருக்கிறது என்று கூறி எனது பெற்றோர் எனது கல்லூரிப் படிப்புக்கு (பி.யு.சி.) முற்றுப்புள்ளி வைத்து மண வாழ்க்கையினை ஆரம்பித்து வைத்தனர். கல்லூரிப் படிப்பு தடைபெற்று வாழ்க்கைப்படகு ஓட ஆரம்பித்தது. எனது கணவர் தமிழ்நாடு எலக்ட்ரிசிட்டி போர்டில் கேஷியர். பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர். வேலைநிமித்தம் சங்கரன்கோவிலில் 2 ஆண்டுகள் குடித்தனம் நடத்தினோம். திருமணத்தன்று பெரியவர்கள் குடியும்குடித்தனமுமாக இரு என்று ஆசீர்வதித்ததற்கு ஏற்ப குடித்துவிட்டு ஆட ஆரம்பித்தார் என் கணவர். பணத்தை குடியிலும் கூத்திலும் செலவழித்துவிட்டு, குடும்பத்தை நடத்த முடியாமல் எனக்கு அடியும்உதையும் தாராளமாக கொடுத்தார். பல்லைக் கடித்துக்கொண்டு பொறுமையாக இருந்தேன். இந்த நிலையிலே ஆண் குழந்தைக்கு தாயானேன். குழந்தை பேறு காலத்திற்காக தாய்வீடு சென்று வீட்டிற்குத் திரும்பிவந்த நான் கண்டகாட்சி என்னை அதிர வைத்தது. ஏதோ சாமியார் சொன்னாராம். என் வீட்டில் உள்ள துணிகளை கொளுத்தினால் வீட்டில் நியவை நீங்கி குடும்பம் சிறப்பாகும் என்று. சாமியார் பேச்சை நம்பி என் வீட்டில் உள்ள எனது துணிமணிகள் அத்தனையும்பட்டுப்புடவைகள் உள்பட மெத்தை, தலையணைகள் கொளுத்தி இருந்தார். இதனைப்பற்றி கேட்ட எனக்கு அடி உதைதான் மிச்சம். இப்படியாக மேலும் ஓராண்டு ஓடியது. இதற்கிடையில் மற்றும் ஒரு பெண் குழந்தை பிறந்தது. கோமகள் எனப் பெயரிட்டு சீராட்டிவந்தேன். அத்துடன் 18 வயதிலேயே குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன் செய்து கொண்டேன்.

சென்னைக்கு மாறுதல் கிடைத்தது. சென்னை மாறுதல் என் கணவருக்கு மறுபடியும் தீய பழக்கங்களுக்கு வித்திட்டன.

அசோக் நகரில் வீடு பார்த்துக்கொண்டு பையனை பள்ளியில் சேர்த்து படிக்க வைத்தேன். இரண்டு ஆண்டுகள் நான் படாத நரக வேதனை கிடையாது. அவர் ரேஸ், சீட்டு என பணத்தை வாரி இறைத்துவிட்டு எனது நகைகள் ஒவ்வொன்றாக வாங்கிச் சென்று மார்வாடியிடம் அடகு வைக்க ஆரம்பித்தார். எனது பையனையும் துன்புறுத்த ஆரம்பித்தார்.

ஒருநாள் நினைத்தாலே... குலை நடுங்குகிறது. என் கணவர் குடித்து விட்டு வந்து தூங்கிக் கொண்டிருந்த எனது குழந்தையை தூக்கி கீழே எறிந்தார். குழந்தைக்கு



தலையிலே நன்கு அடிபட்டு ஒரே இரத்தப் பெருக்குடன் ஒருவிதமாக டாக்டர் வீடும், வீடுமாக அலைந்து குழந்தையை குணமடையச் செய்தேன். அன்றே சாகவிருந்த என் குழந்தை பிழைத்துக் கொண்டது.

பொறுமைசாலி எனப் பெயர் வாங்கின நான் பொறுமை இழந்து சாகத் துணிந்த சமயம் எனது ஏழு வயது மகனே என்னைக் காப்பாற்றினான். அன்றே ஒரு முடிவு எடுத்தேன். அவனுக்காக உலகில் வாழ்வதுஎன்று

# வியர்க்குருவினின்று நிவாரணம் பெற டால்கம் பவுடர் போதாது, நைஸில் வேண்டும்.

## நைஸில் உபயோகியுங்கள்

**வியர்க்குருவினின்று விரைவில் நிவாரணம் பெறுங்கள்.**






HTB-GLL/8806

நைஸில், மருந்துக்கலவையுள்ள பவுடர் ஆகும். வியர்க்குருவின் எந்தவிதத் தொல்லையிலிருந்தும் உடனடியாக நிவாரணம் அளிப்பதற்கென்றே விசேஷமுறையில் தயாரிக்கப்பட்டதாகும். டால்கம் பவுடர்களைப் போலன்றி, பிரச்சினை மோசமாவதனின்றும், பரவுவதனின்றும் எதிர்த்துக் காக்கிறது இது.

1. அளவுக்கு மீறிய வியர்வையைத் தடுக்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது. 3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இதமளிக்கிறது.




உடல் நலத்தின் உறைவிடம்

**க்ளாக்ஸோ**

பையனையும் பெண்ணையும் அழைத்துக் கொண்டு சென்னை நகரை விட்டு திருநெல்வேலி வந்து சேர்ந்தேன். திருநெல்வேலியிலிருந்து 30 மைல் தொலைவில் உள்ள ஒரு சிறிய கிராமத்தில் எனது வயதான தாய், தந்தையருடன் வசித்து வருகிறேன். அத்தாழநல்லூர் என்ற கிராமத்திலிருந்து வீரவளநல்லூர் என்ற ஊருக்கு எனது மகன் சங்கர் தினம் நடந்து சென்று 5-ம் வகுப்பு படித்து வருகிறான். தினம் 8 மைல் நடந்து சென்று படித்துவரும் பாலகனைப் பார்க்கும்பொழுது நமக்கு ஆண்டவன் இந்த சோதனையைக் கொடுத்து விட்டானே என்று நெஞ்சம் குமுறும். பஸ் போக்குவரத்து இல்லாததினால் நடந்து சென்று படிக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டு உள்ளது. அந்தப் பிஞ்சு கால்களுக்கு எவ்வளவு வருத்தம் இருக்குமோ? அவனை நன்கு படிக்க வைப்பதே எனது லட்சியம். எனது வாழ்க்கையின் கொழுகொம்பே எனது பையன்தான்.

சென்ற மாதம் எனது 6 வயது பெண் குழந்தை கோமகளிற்கு நன்கு ஜுரம் கண்டு (டாக்டர் வசதி இல்லாத கிராமத்தில் இருந்து கொண்டு படும் அவஸ்தை கொஞ்சநஞ்சமல்ல. ஹோமியோபதி டாக்டர் வாரம் ஒருமுறை கிராமத்திற்கு வருவார்.) டாக்டரிடம் காண்பித்தும் குணமாகாமல் என்னை விட்டுப் பிரிந்துவிட்டாள். இந்தத் துயரத்திற்கு பின்பும் நான் உயிருடன் தான் இருக்கிறேன். எல்லாம் என் மகன் நன்கு படித்து வளமான எதிர்காலத்தைக் காண்பான் என்ற நம்பிக்கையில்தான்.

ஈஸ்வரி, அத்தாழநல்லூர்.



**தமிழக முதல்வரின் சத்துணவுத் திட்டத்துக்கான நன்கொடைகள்**

**(21-12-82 முதல் 9-7-83 முடிய வரவு)**

| | |
|---|---|
| பெயர் வெளியிட விரும்பாத கோவை அன்பர் | 600—00 |
| திருமதி உஷா ஜகன்னாதன், அயோவா (யு. எஸ். ஏ.) | 242—50 |
| டி. வி. வரதாச்சாரி (ஏழு தவணைகளில்) சென்னை-1 | 175—00 |
| கே. ஹரிஹரன், புதுதில்லி-5 | 101—00 |
| கே மகாதேவன், புதுதில்லி-5 | 101—00 |
| திரு. சி. பொன்னையன், கூட்டுறவு துறை அமைச்சர், தமிழக அரசு சென்னை-9 | 100—00 |
| ராஜலட்சுமி வெங்கடேஸ்வர், சென்னை-17 | 100—00 |
| டி. உஷா, புதுதில்லி-28 | 51—00 |
| ஆர். துரைசாமி, புதுதில்லி-28 | 50—00 |
| டி. ஜோதி, ஜாம்ஷெட்பூர்-11 | 50—00 |
| வி. சரோஜினி (3 தவணைகளில்), சென்னை-14 | 30—00 |
| பி.எஸ். வி.சுப்பிரமணியன், சென்னை-40 | 28—00 |
| ஆர். ஸ்ரீநிவாசன், முசிறி | 12—00 |
| என். சுவாமிநாதன், மேல திருச்செந்தூர் | 10—00 |
| ஆர். சந்திரா ராஜகோபால், மேட்டுப்பாளையம் | 7—00 |
| எஸ். ஜெயலக்ஷ்மி, மதுரை-18 | 3—00 |
| எஸ். ஸ்ரீநிவாசன், நல்லூர் | 1—00 |
| | 1661—50 |
| முன் வரவு (ஜனவரி '83 மங்கையர் மலரில் பிரசுரித்தபடி) | 20975—50 |
| | 22,637—00 |

(இதில் ரூ. 22,319-50ஐ 6-6-83 தேதியிட்ட டிராஃப்ட் நெம். 82/- BA 284867-ஆக இலவச மதிய உணவுத் திட்ட அமைப்பாளரிடம் ஒப்படைக்கப்பட்டது.)

# இதற்கு என்ன செய்வது?

டி.ஆர்.ரமேஷ்

## வலியில்லா பிரசவம்!

**ஆர். தாரிணி** — வடபுதுப்பேட்டை

'வலியில்லா பிரசவம்' என்றால் என்ன? ஹிப்னாடிக் முறை டெலிவரி என்றால் என்ன? இவை நடத்தும் மருத்துவமனைகளின் விலாசம் தெரியப்படுத்தினால் நலமாக இருக்கும்.

**பதில்**

சிசேரியன் மூலம் வயிற்றைத் திறந்து பிரசவமாவதை 'வலியில்லாத பிரசவம்' என்பார்கள். சில பெண்களுக்குக் குழந்தை வெளி வரும் வழி குறுகலாக இருக்கும். சிரமப்பட்டு வெளிவரும் குழந்தையின் தலை நசுங்குவதால் மூளை சேதாரம் ஏற்படலாம். இதனால் சிசேரியன் செய்கிறார்கள். இதில் குழந்தை சுகமாக வெளியே வருவதால், பொதுவாக இப்படிப் பிறக்கும் குழந்தைகள் புத்திசாலிகளாக இருக்கும் என ஒருசாரார் கூறுகிறார்கள்.

முதுகுத் தண்டில் ஒரு குழாயைஇணைத்து வலி தெரியாமல் செய்து ஒருவித பிரசவம் பார்க்கிறார்கள். ஹிப்னாடிக் முறையில் பெண்ணின் மனதை வசப்பட வைத்து. பிரசவம் செய்கிறார்கள். இவை அனைத்தும் பரீட்சார்த்த முறையில் உள்ளனவே தவிர. இன்னும் பிரபலமாகவில்லை. நம் நாட்டுப் பெண்களில் 90 சதவீதப்பெண்கள் இவற்றை ஏற்பதுமில்லை.

## உடனே கவனியுங்கள்!

**சேகரன்** — தூத்துக்குடி

என்னுடைய நண்பரின் மகனுக்கு வயது பதினாறு. அவன் கீழே உட்கார்ந்தால் பிறர் உதவியின்றி அவனால் எழுந்திருக்க முடியாது. சிறிய படியாக இருந்தாலும் மிகுந்த சிரமப்பட்டுத்தான் ஏறுகிறான். டாக்டர்களிடம் காண்பித்தால் அவனுக்கு தசையில் போதிய வலு இல்லை என்றும் உடற்பயிற்சி செய்ய வேண்டும் என்றும் சொல்லி விட்டார்கள். விரைவில் தாங்கள் நல்லதொரு சிகிச்சை கூறினால் நண்பருக்கு பேருதவியாக இருக்கும்.

**பதில்**

உங்கள் நண்பரின் குழந்தையை உடனடியாக ஒரு நியூராலஜிஸ்டிடமாவது மயாலஜிஸ்டிடமாவது காண்பிக்க வேண்டியது அவசரமும். அவசியமுமானதாகும். சில நோய்கள் தோன்றுவதற்கான காரணங்களைக் கண்டு பிடிக்க முடியவில்லை. அவற்றில் இதுவும் ஒன்று. இந்த நோய் காலிலிருந்து படிப்படியாகப் பரவி உடல் உறுப்புக்கள் முழுவதையும், செயலற்றதாக்கிவிடும். சென்னையிலோ மதுரையிலோ இதற்கான மருத்துவர்கள் இருக்கிறார்கள். உடனே கவனிக்கவும்.

## அடுக்கடுக்காக தும்மல் வருகிறது.

**ஏ. சரஸ்வதி** — தாயார் தோப்பு

காலையில் எழுந்ததும் அடுக்கடுக்காகத் தும்மல் ஏற்படுகிறது. இது கடந்த இரண்



டரை ஆண்டுகளாக ஒருநாள் கூட விடாமல் ஏற்படுகிறது. தும்மல் ஏற்படும் நேரத்தில் மூக்கிலிருந்து வெண்மையான தண்ணீராக வழிந்து கொண்டே இருக்கும். இன்சிடால் என்ற மாத்திரை சாப்பிட்டால் சாப்பிட்ட அன்று மட்டும் தும்மல் இருக்காது. சாப்பிடாவிட்டால் அன்றே தும்மல் தொடங்கி விடும். இதற்கு என்ன செய்வது?

**பதில்**

இது அலர்ஜியின் காரணமாக ஏற்படுவது தான். 'இன்சிடால்' வலி நிவாரண மாத்திரைகளைப் போலத் தற்காலிக நிவாரணம் தரும். அவ்வளவுதான். அலர்ஜிக்கு அடிப்படை காரணம் என்ன என்று தெரிந்து கொண்டு அதைப் போக்குவதே நல்லது. எனவே ஒரு ஈ. என். டி. ஸ்பெஷலிஸ்டிடம் ஆலோசனை பெறவும்.

கேள்வி: 2

நான் சிறுநீர் கழித்தவுடன் ஏதோ இரண்டு மூன்று நாட்கள் பட்டினியாக இருந்தது

போல் வயிற்றுக்குள் ஒன்றுமே இல்லாத மாதிரி ரொம்ப சோர்வாக ஒரு பதினைந்து நிமிடங்களாவது இருக்கும். எவ்வளவு அதிகமாக உணவு உண்டு விட்டு பாத்ரூம் சென்றாலும், வெளியே வரும்போது மிகவும் பசியாக இருப்பது போல் எங்கே படுப்போம் என்ற நினைவுடன் மிகவும் சோர்வாக இருக்கிறது. இது எதனால் ஏற்படுகிறது?

**பதில்**

இது நீரிழிவு நோயின் காரணமாகவும் இருக்கலாம். அடிக்கடி சிறுநீர் போதல், சோர்வு, வறட்சி இவை நீரிழிவு நோயின் அறிகுறிகளில் சில. எனவே மருத்துவரை அணுகி உங்களுக்கு எந்த அளவில் நீரிழிவு நோய் இருக்கிறது என்பதைக் கண்டறிந்து, தகுந்த வைத்தியத்தை மேற்கொள்ளவும்.

## உதட்டில் கரும் புள்ளி.

**இந்திரா** மைலாப்பூர்

என் கீழ் உதட்டின் மீது சிகரெட் பிடித்தால் ஏற்படும் கரும் புள்ளிகள் போல் அமைந்திருக்கிறது. நான் நல்ல நிறமாக இருப்பதால், உதட்டின் மீது உள்ள கரும் புள்ளிகள் நன்றாகத் தெரிகிறது. இது மறைவதற்கு என்ன செய்ய வேண்டும்? வைட்டமின் மாத்திரைகள் சாப்பிட்டுப் பார்த்தேன். பலன் ஒன்றும் இல்லை.

**பதில்**

இந்தக் கரும்புள்ளிகள் பிறப்பிலிருந்தே இருக்கிறதா, இடையில் வந்ததா என்று நீங்கள் குறிப்பிடவில்லை. வைட்டமின் மாத்திரைகளுக்கும், கரும் புள்ளிகளுக்கும் சம்பந்தமில்லை. சரும வியாதி நிபுணரைக் கண்டு நிவாரணம் பெறுங்கள்.

## தத்து எடுக்க வேண்டும்.

**மல்லிகா** பெரம்பலூர்

எனக்கும் என் கணவருக்கும் நாற்பது வயதுக்கு மேலாகிறது. குழந்தைப் பேறு இல்லை. இனி பிறக்கும் என்ற நம்பிக்கையும் போய் விட்டது. மீதி காலத்திற்காவது ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொண்டு நிம்மதியாக வாழ விரும்புகிறோம். சட்டப்படி எப்படி இதைச் செய்வது? சிலர் ஹோமம் செய்ய வேண்டும் என்றும், சிலர் தேவையில்லை என்றும் எங்களைக் குழப்புகிறார்கள்.

**பதில்**

நீங்கள் கேள்விப்பட்ட இரண்டிலும் உண்மையுண்டு. ஆனால் 1956– வரை தத்த ஹோமம் செய்து தான் குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்ள வேண்டும் என்றிருந்தது. 56–க்குப் பிறகு இது தேவையில்லை. தத்து பத்திரம் தயார் செய்து உங்கள் ஊர் ரிஜிஸ்தரார் ஆபீசில் பதிவு செய்தால் போதும். ஆனால் ஒரு குழந்தையை தத்து எடுத்துக் கொள்ள வேண்டுமானால் அதற்குப் பல நிபந்தனைகள் உண்டு.

1) தத்து எடுத்துக் கொள்கிறவர் ஆண் குழந்தையை தத்து எடுத்துக் கொண்டால் அவருக்குப் பிள்ளை அல்லது மகன் வயிற்றுப் பேரன் உயிருடன் இருக்கக் கூடாது. அதே போல பெண்ணை தத்து எடுத்துக் கொண்டால், மகளோ மகன் வயிற்றுப் பேத்தியோ இருக்கக்கூடாது.

2) பெண்ணை தத்து எடுத்துக் கொண்டால், பெண்ணுக்கும், தத்து எடுத்துக் கொள்பவருக்கும் இருபத்தியோரு வயது வித்தியாசம் இருக்க வேண்டும்.

3) ஆணைத் தத்து எடுத்துக் கொண்டால், பழக்க வழக்கங்கள் அனுமதித்தாலன்றி அவர் திருமணமானவராக இருக்கக்கூடாது. அதேபோல பழக்கவழக்கங்கள் அனுமதித்தாலன்றி பதினைந்து வயதுக்கு மேற்பட்டவராக இருக்கக் கூடாது.

4) ஒருவரை தத்து எடுத்துக் கொண்ட பிறகு, அவர் பிறந்து வளர்ந்த இடத்திற்கான உரிமைகளும், பந்தங்களும் முழுமையாக விலக்கப்பட்டு, தத்து எடுத்துக் கொண்டவரின் குடும்பத்திற்கு முழுமையான உரிமையும்பாத்தியதையும்உடையவராகிறார்.

இப்படிப் பல நிபந்தனைகள் உண்டு. உங்களுக்குத் தேவையானவற்றை மட்டுமே கொடுத்துள்ளேன்.

## புரோ நோட்டு காலாவதியானால்...

**சுந்தரியம்மாள்** புவனகிரி

நான் ஒரு விதவை. மூன்றாண்டுகளுக்கு முன் என் கணவர் உயிரோடு இருந்த போது,உறவினர் ஒருவருக்குப் பணம் கொடுத்தார். இப்போதைய என் நிலைமை கண்டும் திருப்பித் தராதது மட்டுமில்லாமல், புரோ நோட்டு காலாவதியாகப் போகிறது என்று சொல்லிக் கொண்டு திரிகிறார். இன்னும் இரண்டே மாதங்கள்தான் 'டைம்' உள்ளது. புரோ நோட்டு காலாவதியாகி விட்டால் என் கதி என்ன? நீங்கள் தான் சொல்ல வேண்டும்.

**பதில்**

கடன் வாங்கியவரிடம் எப்படியாவது ஒரு நூறு ரூபாயைப் பெற்றுக்கொண்டு, அந்த புரோ நோட்டிலேயே நூறு ரூபாய் கொடுத்தேன் என்று கையெழுத்துப் போட்டு விடச் சொல்லுங்கள். இந்தச் செயல் உங்கள் சாமர்த்தியத்தில் இருக்கிறது. அப்படிச் செய்து விட்டீர்களானால், மேலும் மூன்றாண்டுகளுக்கு உங்கள் புரோநோட்டு உயிர் பெற்று விடும். பிறகு நாலு நல்லவர்களை வைத்துக் கொண்டு, மத்தியஸ்தம் செய்து பணத்தைத்திருப்பி வாங்கிவிடுங்கள். அல்லது நீதிமன்றத்திலும் மனு செய்யலாம்.

HE is the cause of all our actions. We are only HIS instruments: the result is in HIS hands.

In any action the means are as important as the result.

ALWAYS do to others as YOU would wish others do to you in similar circumstances. Let your thoughts and actions be guided by Dharma (righteousness).

Don't compare yourself with those more fortunate than you and feel sorry: be happy that you are above those less fortunate than you. Involving yourself in solving others' problems will minimise your own.

Be thrifty. Spend only on needs and not on desires you can do without. Today's waste might prove to be tomorrow's want. Avoid tastes and expenditure you cannot always afford.

Save today for tomorrow's comforts or emergencies. The future is always unpredictable. Better to save than to have to borrow.

---

மர்மத் தீவில்

# மாலா-பாலா

கதை: மகிழ்ச்சிக்கண்ணன்
சித்திரம்: விஜயா






















ஒண்ணும் இப்போ செய்யாதீங்க. அவர் உள்ளே போவட்டும். அப்புறம் பாத்துக்கலாம்.


டில்லி, நானும் மரங்களுக்குள்ளே போகணும்.
இப்போ வேண்டாம் சாமி, இருட்டட்டும். சந்தை ஆரம்பமாகட்டும். அது சரி எப்படி போவீங்க.
இருட்டட்டும் வீராசாமி கீழே இறங்குது இல்லை.


டில்லி, நான் வேலையை ஆரம்பிக்கறேன். என் பையைக் குடு. இப்போ கூட இரு
ஜாக்கிரதையா தம்பி.
ஒரு ஆள் வருகிறான்


அந்த ஆளை இரும்புக் குழாயால் மண்டையில் பாபா அடிக்க அவன் சத்தம் போடுவதற்குள் டில்லி அவன் வாயை அடைத்தான்.
வாடா டில்லி, தோப்புக்குள்ளே இழுத்துப் போவோம்!


டில்லி, அடையாள கார்டு கூட இருக்குது. இதுதான் ரகசிய டெலிபோன்.
சீக்கிரம் டிரஸ் மாத்துங்க நான் இந்த ஆளை ஒளிச்சு வச்சுடறேன்.


சரி, தம்பி சந்தை ஆரம்பமாயிடுச்சு. லைட்டெல்லாம் போட்டாச்சு! மொதல்ல ஏலம்தான்!
நான் போறேன். நீ நம்ம ஆளுங்களை ரெடியா மண்டபம் தோப்பிலேயே இருக்க வை..


ரொம்ப அழகான பொண்ணு. 14 வயது ரதி மாதிரி டான்ஸ், பாட்டு, ஓட்டம், ஆட்டம் எல்லாம் தெரியும். யாருக்கு வேணுமோ விலை கேட்கலாம்
பத்தாயிரம்
பதினைந்தாயிரம்
யாரு நம்ம பாபாவையா? மாதிரிங்க.. உம். கிடைக்காது.
ஒரு லட்சம்!

தொடரும்...



# ராசி பலன்

## ஆகஸ்ட் '83

### மேஷம்



இம்மாதத்தின் முதல் பதினைந்து நாட்கள் வரை அவ்வளவு சுவாரஸ்யமில்லா நாட்களாக சென்றாலும், கடைசிவாரம் மனமகிழ்ச்சியைக் கொண்டு தரும். நீண்ட நாளாக எதிர்பார்த்து வந்த நண்பர் (அ) உறவினரின் வருகையால் இல்லத்தில் மகிழ்ச்சியும், குதூகலமும் ஏற்படும். அரசாங்க உத்தியோகத்தில் உள்ளவர்களுக்கு மேலதிகாரிகளின் ஆதரவும், கூட வேலை செய்பவர்களின் உதவியும் சமயத்தில் கிடைக்கும். பணவரவும் திருப்திகரமாகவே இருக்கும்.

### ரிஷபம்



வரவு மிகவும் சரளமானதாக இருந்தாலும், அதைக் காப்பதில் மிகவும் குறியாக இருக்க வேண்டிய நாட்கள் இவை. உங்களைச் சுற்றியிருப்பவர்களினால் செலவினங்கள் அதிகமாகும். இம்மாதம் மிகவும் குதூகலமான, பரந்த மனப்பான்மையுடன் இருப்பதால் பணவிஷயத்திலும் ஜாக்கிரதையாக இருப்பது நல்லது. இரும்பு சம்பந்தமான வியாபாரிகளுக்கு ஓரளவு சிக்கல்கள் மிகுந்த மாதமாக இருக்கும். கலைஞர்களுக்குப் புகழுடன் பணமும், சேரும்.

### மிதுனம்



உத்தியோக நிமித்தமாகவோ, கணவரின் மூலமாகவோ வெளியூர்ப் பிரயாணங்கள் ஏற்படலாம். அதிக அலைச்சலின் காரணமாக உடல்நிலை சிறிதே பாதிக்கவும் கூடும். குழந்தைகளின் காரணமாக இதுநாள்வரை இருந்து வந்த சங்கடங்களும் சஞ்சலங்களும் மாறி இம்மாதத்தின் நாட்கள் அமைதியாகவே செல்லும். மிகவும் நெருங்கிய உறவினர் (அ) நண்பர் ஒருவரின் மூலமாக எதிர்பாராத பணவரவு ஏற்படும். திருமணமாகாதவர்களுக்கு நல்லவரன்கள் எதிர்ப்படும்.

### கடகம்



பல மாதங்களாக எடுத்த காரியங்களில் தோல்வி, அலைச்சல் என்று இருந்த நிலைமை இம்மாதம் மாறி, நல்ல விதமாக திருப்புமுனை ஒன்று ஏற்படும். உங்களை வந்தடையும் நண்பர் ஒருவரின் உதவியால் சரியான பாதையில் நடந்து செல்ல ஆரம்பிப்பீர்கள். கடின உழைப்பும், தீர்க்கமான சிந்தனையும் மேற்கொண்டீர்களானால் பிரகாசமான எதிர்காலத்திற்கு வழியுண்டு. பணவரவு செலவுக்குள் அடங்குவதாகவே இருக்கும்.

### சிம்மம்



மனசஞ்சலங்களும், குழப்பமும் இம்மாதம் ஓரளவு மிகுந்தே காணப்படும். கூடவிருப்பவர்களுடன் ஒத்துப் போகாமை, அதீத கற்பனை இவற்றை விட்டொழித்து, மனிதர்களுடன் சுமுகமாகப் பழக ஆரம்பித்தீர்களானால், உங்கள் பிரச்சினைகள் பனிபோல விலகும். தெய்வ பக்தியும், ஆழ்ந்த நம்பிக்கையும் உங்கள் வாழ்க்கையில் நல்ல திருப்பத்தை உண்டாக்கும். மற்றபடி எல்லாவிதத் திறமைகளும் கொண்டுள்ள உங்களால் வாழ்க்கையை மிக எளிதாக வெற்றிகொள்ள முடியும்.

### கன்னி



எதையும் தீர ஆராய்ந்து, கச்சிதமாகச் செய்யும் மனப்போக்குடைய நீங்கள் • திட்டமிட்டிருந்தபடி காரியங்கள் இம்மாதம் வெற்றிகரமாகவே முடியும். சுயதொழில் செய்பவர்களுக்கு அலைச்சலும், குழப்பமும் அதிகமாக



இருந்தாலும், எடுத்த முயற்சிகள் நல்லபடியாக முடியும். பணவரவு நல்ல விதமாகவே இருக்கும். இம்மாதத்தின் கடைசியில் சிறிதே மனவேற்றுமையும், சண்டைகளும் குடும்பத்தினரிடையே எழும். குழந்தைகளினால் அலைச்சலும் இருக்கும்.

### துலாம்



சமூகசேவையில் ஈடுபட்டவர்கள், பொதுமக்களிடையே தொடர்புள்ளவர்களுக்கு இம்மாதம் எதிர்பாராத புகழ் வந்தடையும். அவ்வளவரானும் போற்றப்படும் உன்னத நிலையை அடைவார்கள். கலைஞர்களுக்கும், விளையாட்டுத் துறையில் உள்ளவர்களுக்கும் எதிர்பார்த்த வெற்றிகள் கிட்டும். வேலைதேடி அலைபவர்களுக்கு இம்மாதம் நல்லதொரு செய்தியைக் கொண்டு வந்து தரும்.

### விருச்சிகம்



வெளியில் நல்ல புகழும், பொருளும் பெற்றிருந்தாலும் குடும்பத்தில் ஒற்றுமையின்மையும், சச்சரவுகளும் எழுவதால் மன அமைதியோ உடல் நலமோ கெடக்கூடும். வெளியூர்ப் பிரயாணங்களோ, புனிதப் பயணங்களோ மனதுக்கு நல்ல ஆறுதலைத் தரும். குழந்தைகளினால் இழந்த மன நிம்மதியும், சந்தோஷமும் கிட்டும். இம்மாதக் கடைசி வாரத்தில் சுப நிகழ்ச்சிகள் உண்டாகி நல்ல முன்னேற்றத்தைக் கொடுக்கும்.

### தனுசு



உங்களைச் சுற்றியுள்ள மனிதர்கள் கூறும் யோசனைகளை மிகவும் சீரியஸாக எடுத்துக் கொள்ளாமல் இருப்பது நல்லது. சுயமாகச் சிந்தித்து, தீர யோசித்து முடிவெடுப்பதே இந்தச் சமயத்தில் நல்ல முடிவை உங்களுக்குத் தரும். அதிகம் யாருடனும் விவாதிக்காமல் இருப்பது, குறிப்பாக உணர்ச்சி வசப்படும் சுபாவம் கொண்டவர்களிடம் தர்க்கம் செய்யாமல் இருப்பது நல்லது. இதனால் பல பின் விளைவுகளைத் தடுக்கலாம்.

### மகரம்



நீதிமன்றம் சம்பந்தப்பட்ட வழக்குகளில் சிக்கிக் கொண்டுள்ளவர்களுக்கு இம்மாதம் சிறிது அலைச்சலைத் தந்தாலும், முடிவு உங்களுக்குச்சாதகமானதாகவே இருக்கும். பணம் ஓரளவு விரயமாகவே செய்யும். வெளியூர்ப் பிரயாணங்களும் உண்டாகலாம். குடும்பத்தாரின் அன்பு, ஒற்றுமையின் காரணமாக எந்தப் பிரச்சினைகளையும் எளிதாகச் சமாளித்து விடுவீர்கள். தெய்வானுகூலம் உங்களிடம் நிறையவே உண்டு.

### கும்பம்



அதிகப் பரிச்சயமில்லாத இடங்கள் (அ) ஊர்களுக்குச் செல்ல நேரிடலாம். அதனால் புதிய தகவல்களும், புதிய நண்பர்களின் சேர்க்கையும் உண்டாகும். நீங்கள் திட்டமிட்டுள்ள எதிர்காலத்திற்கு நல்ல அடிப்படையாக இப்பிரயாணம் அமையும். தனியார் நிறுவனங்களில் உள்ளவர்களுக்குப் பதவி உயர்வும், பண வரவும் உண்டாகும். குடும்பத்தாரிடையே சுப நிகழ்ச்சியும், உறவினர்கள் வருகையால் குதூகலமும் உண்டாகும்.

### மீனம்



எதையும் மிகவும் தீவிரமாக எடுத்துக் கொள்ளாமல் சாதாரணமாகவே நடந்து கொண்டுவிட்டால் அதிகப் பிரச்சினைகள் இல்லாமல் இம்மாதம் சென்றுவிடும். மிகவும் அவசரமான விஷயங்களைத் தவிர, தீவிரமாக ஆலோசிக்க வேண்டிய விஷயங்களை உடனடியாக முடிக்காமல் தள்ளிப் போடுவது நல்லது. குடும்பத்தாரிடையேயும் அதிகம் வாக்குவாதம் ஏற்படுத்திக்கொள்ளாமல் இருந்தால் ஏற்றத்தாழ்வு இல்லாத மாதமாகப் போகும்.

# 29

கல்யாணம் விமரிசையாக நடந்தது. சின்னுவின் சிநேகிதிகள், காலேஜ் லெக்சரர்கள், அண்ணன்மார்கள், சிநேகிதர்கள் எல்லோரும் வந்திருந்தார்கள். அவர்கள் பக்கம் டில்லியிலிருந்தும் மன்னார்குடியிலிருந்தும் பாபட்லாவிலிருந்தும் பெருக்குப் பேர் இறங்கிக் கொண்டிருக்க மதுதான் பாலம் சென்ட்ரலுக்கும் எக்மோருக்கும் அலைந்து கொண்டிருந்தான். கல்யாணம் ஆன கையோடயே சாந்தி முகூர்த்தம்வைத்து விட்டார்கள். அவர்கள் வீட்டில் சௌகர்யப்பட வில்லை என்று சத்திரத்திலேயே ஒரு ஓரத்து ரூமை ஜோடித்து வைத்திருக்க சின்னுவுக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. வெளியே கூச்சலும் கும்மாளமும் அடங்குகிற வரைக்கும் ராமச்சந்திரனைத் தடுத்துக் கொண்டே இருந்தாள். உடம்பில் பதற்றம் இருந்தது. ராமச்சந்திரன் சம்பளம், வேலை எல்லாவற்றையும் விவரமாகச் சொன்னாலும் சின்னுவுக்கு அதெல்லாம் உரைக்கவே இல்லை. மெல்ல மெல்ல வெளி உலகச் சப்தங்கள் அடங்கிப் போனதும் ராமச்சந்திரன் மெல்லப் பேசுவதெல்லாம் பலமாகக்கேட்க சின்னுவை அவன் தொட முனைந்த போது உடம்பெல்லாம் இறுகிப் போனது போல, உறைந்து போனது போல உணர்ந்தாள். ஏன் பயப்படறே என்று கேட்டாலும் ராமச்சந்திரனும் கொஞ்சம் நெர்வஸாகத்தான் இருந்தான். உங்களுக்கு எத்தனை அக்கா, உனக்கு எத்தனை மாமா என்றெல்லாம் கேள்விகளுக்கிடையில் அவன் எதிர்பார்ப்பு மிதந்து கொண்



டிருந்தது. தொட்டுப் பார்ப்பதைத் தடுப்பதில் சுரத்து இல்லை. விளக்குப் போட்டிருக்கும் போதே அவன் தன்மேல் ஆக்கிரமிப்பதை அவள் விரும்பவில்லை. ராமச்சந்திரனுக்குப் பார்க்கவேண்டும் போல உணர்ந்ததை உணர்ந்து கொண்டாலும் தொட்ட இடத்தையெல்லாம் தடை செய்தாள். ரொம்ப சிணுங்கலுக்குப் பிறகு விளக்கணைத்த பின்பு மெதுவாகப் பேசுவதாக வாக்களித்த பிறகு, தனக்கு நிகழ்வதைச் சின்னு அனுமதித்தாள்.

சின்னுவுக்கு இதைப் பற்றி ஒரு கவலை தான் இருந்தது. அந்தச்சரணில் அவளுக்கு உடனே எதுவும் இன்பம் தோன்றவில்லை. வெட்கத்தையும் தன்மானத்தையும் பறி கொடுத்து விட்டது போல உணர்ந்தாள். இந்த வேதனையை வாங்கிக் கட்டிக் கொள்ளவேண்டுமா என்று தோன்றியது. சின்னு வளர்ந்த சூழ்நிலை அத்தனையும் ஒட்டு மொத்தமாக இந்த ராத்திரியில் ஏதோ சதி செய்து சந்தோஷத்தைக் கெடுப்பது போல் இருந்தது. ராமச்சந்திரன் அவளை லேசாகத்தான் கலைத்தான். பயப்படாதே பயப்படாதே. என்று அடிக்கடி சொன்னான். புஸ்தகம் எல்லாம் படித்திருக்கிறான் போல. உன் சந்தோஷம்தான் முக்கியம் என்று சொன்னது அவளுக்குச் சந்தோஷமாக இருந்தது அதனால் ராமச்சந்திரன் சொன்னதைக் கேட்கலாம் போல இருந்தது. தன்னை ஒரு பொருளாக மதிக்காமல் மனுஷியாக மதிப்பான் போலத்தான் தோன்றியது. ஒன்றுமே பேசாமல் சும்மா இருந்தால் அது அவனுக்கு ஒரு தண்டனை ஆகும். அதனால் சின்னு கொஞ்சம் காதல் போலப் பேசினாள். பேசும்போதே கூச்சப்பட்டாள். இருந்தாலும் பேசினாள். இந்த மாதிரிவார்த்தைகள் எல்லாம் பேசுவோம் என்று சனவிலும் நினைத்திருக்க மாட்டாள். இருந்தும் நடப்பதில் அதீதமான சந்தோஷம் ஏதோ ஒரு மழுப்பலாக இருந்தது. கொஞ்ச நேரத்தில் ராமச்சந்திரன் அவளை விட்டு விலகிப் பக்கத்தில் படுத்துக் கொண்டபோது அப்பாடா என்று இருந்தது. இருந்தும் உள்ளுக்குள் இந்த ஆக்கிரமிப்பு அவளுக்குப் பிடித்திருந்தது. துன்பம் இருந்தாலும் அது இருக்க வேண்டும். அதைத் தாங்கிக் கொள்ள வேண்டும். காலையில் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருக்கும் ராமச்சந்திரனை மிகக் கிட்டத்தில் பார்க்கும்போது சின்னுவுக்கு இதுவரை ஏற்படாத புதிய சந்தோஷம் ஏற்பட்டது.

மாப்பிள்ளை உடனே டில்லிக்குப் போய் விடுவதாகவும் ஏப்ரல் மாசம் வீடு பார்த்து விடுவதாகவும் அப்போது அப்பா சின்னுவைக் கொண்டு போய் விட்டு வருவதாகவும் ஏற்பாடு பண்ணிவிட்டு விடை பெற்றபோது சின்னுவுக்குப் பிரிந்து போகிறாரே என்று அழத் தோன்றவில்லை. மாறாக இன்னும் கொஞ்ச நாள் அம்மா அப்பாவுடன் இருக்கப் போகிறோம் என்று சந்தோஷம் இருந்தது.

''சின்னு கல்யாணம் ஆயிடுத்து. இனிமேல் பாவாடை, தாவணி மாக்ஸி எல்லாம் அணியக் கூடாது'' என்று அம்மா சொல்லி விட்டாள். ''உன் ஆம்படையான் கிட்டப்

# எப்போதும் பெண்

சுஜாதா

போய் நீ என்னவோ கோரம் பண்ணிக்கோ'' தழையத் தழையப் புடவைதான். புயல் வேகத்தில் சமையல் கற்றுக் கொடுத்தாள். கோவில் கோவில் கோவில் என்று அடிக்கடி பக்தி.

கல்யாணம் ஆனதால் சின்னுவுக்கு அங்கீகரிக்கப்பட்ட பெரிய மனுஷித் தன்மை கொடுக்கப் பட்டது. அண்ணன்மார்கள் கொஞ்சம் ஒதுங்கிக் கொள்ள அப்பா கூட அவள் தலையைத் தட்டுவதையும் உச்சி முகர்வதையும் எப்போதாவது முத்தம் கொடுப்பதையும் நிறுத்திக் கொண்டு விட்டார். கல்யாணம் ஆனவர்கள் புது சினேகிதம் கிடைத்தது. வெற்றிலை பாக்குப் போட்டுக் கொள்ள அனுமதிக்கப்பட்டாள்.

மாவு அரைக்கும் பொழுது முதலில் உளுந்தைப்போட்டு அரைத்து விட்டு மாவு எடுக்கும் போது குழியிலேயே கொஞ்சம் உளுந்து மாவை அப்படியே விட்டு, ஓடவிட்டு, ஓடும்பொழுதே ஒவ்வொரு கை அரிசியாகத் தண்ணீருடன் போட்டு அரையுங்கள். அரிசி அரைக்கும் போது அடியில் சிக்கிக் கொண்டு குழவிக்கல் மேலே தூக்கிக் கொண்டு விடாமல் நிதானமாக அரைக்கும். கல்லுரம் தேயாது.

அரிசி மசிந்ததும், எடுத்து வைத்திருக்கும் அரைத்த உளுந்து மாவை, அரிசி மாவுடன் கொட்டி அத்துடன் தேவையான உப்பையும் போட்டு சிறிதுநேரம் ஓடவிட்டால்எல்லாமாவும் சமமாகக் கலந்துவிடும்.

—சுகுணா.

காலில் மெட்டி ஒலித்தது. கொஞ்ச நாட்களிலேயே உடம்பு பூசிவிட்டாற்போல் ஆகி விட்டது. நல்ல வேளை எதும் நடக்கவில்லை என்று அம்மாவிடம் சந்தோஷப் பட்டுக் கொண்டாள். ''மாத்திரை யெல்லாம்நிறைய முழுங்கி வை. போன கையோட வயத்தைச் சாக்கண்டு வந்துராதே. இத பத்தி உன் ஆம்படையான் ஏதாவது சொன்னானா?''

''இல்லேம்மா.''

''நீதான் சாக்கிரதையா இருக்கணும். நாலாவது நாள்ளருந்து கத்திரி வழி எடுக்கிற வரைக்கும் கிட்டச் சேர்க்காதே என்ன?''

''போம்மா'' என்று அதட்டினாள்.

''எனக்குப் பிரசவம் பார்க்கத் திராணி இல்லே. இப்பத்தான் கல்யாணத்துக்கு அலையா அலைஞ்சு இடுப்பு ஒடிஞ்சு போயிடுத்து. நான் கிழடையராகப் போறவ. அதனால எதானு எக்குத் தப்பா ஆயிட்டா அதுக்காக அபார்ஷன் கிபார்ஷன்னு பித்துக்குளிக் காரியம் எல்லாம் பண்ணிக்காதேங்கோ!''

ராமச்சந்திரனிடமிருந்து லெட்டர் வந்தது. நீலக் கடுதாசியே ஒரு மாதிரி கிறக்கத்தை ஏற்படுத்தியது. ஆல்பத்தை எடுத்து வைத்துக் கொண்டு கண்ணாடிக்காரனை நன்றாகப் பார்த்துக் கொண்டாள். நெஞ்சம் படபடத்தது. பதில் கடுதாசியின்போது ராமச்சந்திரனை எப்படித் தமிழில் கூப்பிடுவது என்று அரை மணி நேரம் திண்டாடிவிட்டு 'டியர்' என்று தீர்மானித்தாள். இப்படிக்கு உங்கள் அடியாள் என்பதை அடித்துவிட்டு, அன்புள்ள முத்தங்களுடன் என்பதைத் திரும்பத் திரும்ப அடித்துவிட்டு அன்புடன், காதலுடன் என்று தைரியம் பெற்று முடித்தாள். தானே கொண்டு போய்த் தபால் ஆபீசில் போட்டாள்.

கரோல்பாக்கில் எழுநூறு ரூபாய் வாடகைக்கு ரெண்டு ரூம் பிளாட் எடுத்திருப்பதாகவும் அட்வான்ஸ் கொடுத்து விட்டதாகவும், வீட்டுக்காரன் பஞ்சாபி, ரொம்ப நல்லவன் என்றும், வீட்டின் வரைபடத்தை எப்படி, பெட் ரூம் எப்படி என்று எல்லாம் எழுதியிருந்தான். அப்பா டில்லிக்கு டிக்கெட் வாங்குவதற்கு இன்னும் நாட்கள் இருக்கிறதென்றும், லீவு விட்டப்புறம்தான் கூட்டம் இருக்கும் என்றும் சொனார்

ஒரு தடவை டில்லியிலிருந்து மெடிகல் ஷாப்புக்கு டெலிபோன் பண்ணிக் கூப்பிட்டான். சின்னுவுக்கு டெலிபோன் பேச வரவில்லை. வெச்சரட்டுமா, வெச்சரட்டுமா என்று அவசரப்பட்டாள். மாத்திரைப் பாட்டில்களுக்கு நடுவே கணவனோடு கொஞ்சிப் பேசுவது விநோதமாக இருந்தது. மது தான் அவனை ரொம்பக் கோட்டாப் பண்ணிக்கொண்டிருந்தான். அவனும் அவனை 'உனக்குக் கல்யாணம் ஆறப்ப மாட்டிக்க போறே பாரு! சேர்த்து வைச்சு இருக்கு உனக்கு'' என்றான்.

அம்மா தகரப் பெட்டியில் ஸ்டவ்விலிருந்து அப்பளக் குழவி வரை சிறுகச் சிறுகச் சேர்த்துக் கொண்டிருந்தாள். சில சமயங்களில் சட்டென்று அம்மா நிறுத்தி வெற்றுப் பார்வை பார்ப்பாள்.

''என்னம்மா?''

''சின்னு நான் உன்னை வளர்த்தவ. பெத்த தாயார் இல்லேன்னாலும் ஏண்டி நீ போறேங்கறதுநினைக்கறப்ப வயித்தைப் பிசையறது''

''எனக்கும் அப்படித்தாம்மா இருக்கு. பேசாம என்னோட டில்லிக்கு வந்துரு. மூணு மாசம் இருந்துட்டுப் வாயேன்.''

''இதெல்லாம் நடக்கிற காரியமா? உங்கப்பாதான் வர முடியும்! இப்பவே பிராமணன் ஹரித்வார் ரிஷிகேஷ்னு பிளான் பண்ணிண்டிருக்கு. இவரை ரெண்டாம் கல்யாணம் பண்ணிண்டதில் ஒரு எடம் அழைச்சுண்டு போனதில்லே. சொந்தமா ஒரு பிள்ளை பெத்ததில்லே. அப்பா அம்மா ஆத்துக்குக்கூடப் போனதில்லே....''

கூந்தலுக்கு
எழிலோ எழில்
மென்மை
சுகமோ சுகம்.
வழங்குவது
ஹேலோ
ஷாம்ப்பூ

ஹேலோ வழங்குது
கூந்தல் எழில்—
கூந்தல் பெற்றிடும்
மென்மை சுகம்.
அதன் மணமோ
அபூர்வப் புதுமையே,
ஹேலோ உணர்வே
உன்னதமே.




வியப்பூட்டும் புதிய ஹேலோ வரிசை

ஹேலோ எக்
ஷாம்ப்பூ—
புரத
ஊட்டத்திற்கானது.

புதிய ஹேலோ
க்ரீன் ஆப்பிள்
ஷாம்ப்பூ—
வியப்பூட்டும்
புத்துணர்வு மணம்
அளிக்கிறது.

புதிய ஹேலோ
ஹெர்பல்
ஷாம்ப்பூ—
மூலிகைகளின்
இயற்கை கலவைகள்
உள்ளது.

ஹேலோ உணர்வே உன்னதமே!

GK&E.883.29.TM

''அம்மா, சண்டை வந்தா என்னம்மா பண்றது?''
''யாரோட?''
''ராமச்சந்திரன் கூட.''
''பேர் சொல்லக் கூடாது! சண்டை எதுக்கு வரணும்? புருஷா சொல்றதுக்கு அனுசரிச்சுண்டு போயிடு. அவா எப்பவுமே கொஞ்சம் கோபக்காராதான். முதல் கோபம் ஆம்படையா மேலதான் பாயும். அவா ஜாதியே கார்வார் பண்ற ஜாதி. தழைஞ்சு போகலேன்னா பொம்மனாட்டிக்கு இந்த தேசத்திலே வேற வாழ்வு கிடையாது! சின்னச் சின்ன விஷயங்களுக்கெல்லாம் பிடிவாதம் பிடிக்காதே. விட்டுக் கொடுக்கத் தயாரா இரு! ராமச்சந்திரன் பார்த்தா ரொம்பச் சாது மாதிரிதான் இருக்கார். ஆனாலும் கல்யாணத்துக்கு அப்புறம் அவாளுக்கெல்லாம் வேற மாதிரி பிடிவாதங்கள் கோவங்கள்ளாம் வரும். எந்தக் கோவமும், பிடிவாதமும் புருஷனை விடக் கல்யாணத்தை விட அதனோட புனிதத்தை விட பெரிசில்லே. அதை மட்டும் ஞாபகம் வச்சுக்கோ. நீ நல்ல குடும்பத்துப் பொண்ணு. நல்லபடியா வளர்ந்தவ. கண்ணுக்கு லட்சணமா இருக்கே. உன்னை அடைஞ்சதுக்கு அந்தப் பையன் கொடுத்து வச்சிருக்கணும். அதேபோல நீயும் சுபிட்சமா சந்தோஷமா இருப்பே. இங்க வா'' என்றாள்.

சின்னு அருகில் செல்ல அவள் தலையைத் தடவி விட்டு அம்மா சற்று கண்ணீர் சிந்தினாள். ''பொம்மனாட்டி ஜன்மம் அப்படி! எப்பவும் ஏதாவது பிரயாணத்துக்குப் புறப்பட்டுண்டே இருக்கணும். உன்னை விட்டுட்டு எப்படி இருக்கப் போறேன்! சின்னு நினைச்சாலே வயத்தைக் கலக்கறதே!''

சின்னுவும் அம்மாவுடன் சேர்ந்துகொண்டு அழுதாள். சற்று நேரத்திற்கப்புறம் அவனே, ''என்ன இது வெள்ளிக் கிழமையும் அதுவுமா ரெண்டு பேரும் அழுதுண்டு! அம்மா நான் எங்க போறேன்? திரும்பி இங்க வந்து டேராப் போடப் போறேனா இல்லையா பாரு'' என்றான்.

எதிர்நோக்கிய பிரிவில் தவிர்க்க முடியாத ஒரு துக்கம் இருப்பதை உணர்ந்தாள். அம்மாவை நன்றாகப் பார்த்துக் கொள்ள வேண்டும் போல இருந்தது. அப்பாவையும் தான்! அண்ணன்மார்களையும்தான்!

யார் இந்த ராமச்சந்திரன்? சின்னுவுக்குத் தெரியாது! இனி அவள் வாழ்நாள் முழுதும் அவனுடன் பந்தப்பட்டு விட்டாள். அவனை நிசமாக யார் என்று தெரியாது. ஒரு நாள் பார்த்தாள். மற்றொரு நாள் மணந்தாள். இன்னொரு நாள் இருட்டில் அவனுடன் இருந்தாள்! இப்போது தன் விதிகள் அத்தனையையும் பார்சலில் கட்டிக் கொண்டு படுக்கை கட்டிக் கொண்டு டில்லியில் அந்த மனிதனை நோக்கிச் செல்கிறாள்! சமூகமும் சதி செய்த விதிகளும் நியமித்து விட்ட கடமை! அதை அவள் செய்தாக வேண்டும். வடக்கே போகும் எத்தனை எத்தனையோ புது மணப் பெண்களில் இவளும் ஒருத்தி. இவளும் வாழ்ந்து வாழ்ந்து பெற்று, புறப்பட்டு, பிரிந்து பிரயாணப்பட்டு, உலகத்தில் உள்ள அத்தனை பெண்களில் ஒருத்தி.

சித்திரை மாசம் பிறந்த கையோட அப்பா ஆபீசிலிருந்து லீவு எடுத்துக் கொண்டு அவளை அழைத்துப் போக ஏற்பாடு செய்து விட்டார். சென்ட்ரலுக்கு எல்லோரும் வந்திருந்தார்கள். ஐ. வி. எஸ்காரர் உடம்பு முடியவில்லை என்றாலும் பிளாட்பாரத்தில் வந்து நின்று கொண்டிருந்தார். எல்லாருக்கும் கண்ணருகில் எப்போதும் கண்ணீர் இருந்தது. அம்மாதான் தடை இல்லாமல் அழுதாள். மதுகருப்புக் கண்ணாடி போட்டுக் கொண்டிருந்தான். அவளை லீவுக்கு வாடா என்று நெஞ்சைத் துக்கம் அழுத்தக் கேட்டான். ''எங்க போறே நீ வரமாட்டியா என்ன?'' என்றான் மது. வீட்டு பூரா பட்சணமும் பிளாஸ்டிக் கூடையும் தினத் தந்தியில் கட்டின திராட்சைப் பழமுமாக இருந்தன. சின்னுவுக்கு மணியடித்துப் புறப்படப் போகிறது என்று பரபரப்புத் தெரிந்ததும் வாய் விட்டு அழுதாள். ஏதோ அவளுக்கு அந்தப் பிரிவில் பகுத்தறிவையும், மீறின சோகம் இருந்தது. எதையோ எப்படியோ இழக்கப் போகிறோம் என்று எச்சரிக்கை இருந்தது. பிளாட்பாரத்தில் இருந்து புறப்பட்ட அந்தக் கணத்திலிருந்து தான் ஸ்பஷ்டமாக மாறிப்போய்விடுகிறதாக மற்றொரு உலகத்துடன் ராஜி பேச ஓடுவதாகத் தோன்றியது. சன்னல் கம்பியில் கன்னத்தை வலிக்க அழுத்திக் கொண்டு அம்மாவையும் அண்ணன்களையும் கண்ணீர்த் திரையினூடே பார்த்தாள். (தொடரும்)

தேங்காய் பர்பி செய்யும்போது தேங்காய்த் துருவலுடன் இளம் கேரட்டை துருவி ஒரு கப்புக்கு அரை கப் விதம் சேர்த்துக் கொண்டால் ருசியாகவும் அழகாகவும் இருக்கும். காய்ச்சி ஊற்றிய பின் மேலே சிறிது பசும்பாலை பரவலாக ஊற்றி பால் அடிவரை இறங்கியபின் ஆறியவுடன் துண்டுகள் போடவேண்டும். மெத்தென்று இருப்பதுடன் சுவையும் கூடுதலாகும்.

—ஆர். ஞானவி.

தமிழக அரசில் நிரந்தர வேலைகளி லுள்ள 34 வயது (தமிழ் ஐயர், அஷ்ட சகஸ்ரம்), பெண்ணுக்கும் 42 வயது பைய னுக்கும் வரன்கள் தேவை. Mutual மற்றும் உட்பிரிவுகள் சம்மதம். மனப்பொருத்தம் முக்கியம். பெட்டி எண்: 896

கௌசிக கோத்திரமில்லாத நல்லபடிப்பும் வேலையுமுள்ள மணமகன் தேவை. பெண் ணின் வயது 28. மகாநக்ஷத்திரம். எம். ஏ. பி. எட். செவ்வாய்தோஷம் உள்ளது. பெண் வேலைபார்க்கத் தகுந்த படிப்பும், மிகுந்த திறமையும், குணநலன்களும், வேண்டிய செல்வமும் உள்ளவள். தகப்பனார் நல்ல ஸ்திதியிலிருப்பவர். தகுந்தவர்கள் விண்ணப் பிக்கவும். பெட்டி எண்: 897

# திருமணமலர்



பிள்ளை வயது 32, உயரம் 5' 6'' வழக் கறிஞர் தொழில், வீரசைவம், லிங்காயத்து வகுப்பைச் சேர்ந்தவருக்கு 28 வயதுக்குள் இருக்கும் அழகான இதே இனத்தைச் சேர்ந்த டாக்டர் பெண் (அ) கல்லூரியில் விரிவுரை யாளர். (அ) பாங்கில் பணிபுரியும் பெண் தேவை. பெண்ணின் ஜாதகத்தைப் போட் டோவுடன் அனுப்பி வைக்கவும். பெட்டி எண்: 898

தமிழ் இந்து பொற்கொல்லர் — சைவம். அழகான சிவப்பு நிறம் உள்ள, டி. ஆர். ஈ. பட்டம் பெற்று மத்திய அரசு நிரந்தரப் பணியில் உள்ள பெண்ணுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த பட்டம் பெற்று நிரந்தர அரசுப் பணியில் உள்ள மணமகன் தேவை. பெட்டி எண்: 899

கௌசிக கோத்திரம், சுவாதி நட்சத்திரம், 25 வயது, அய்யர் வடமாள், காது கேட்பது, பேசுவது இவைகளில் குறை, பேச்சு ஊன முற்றோருக்கான விசேஷ பள்ளியில் பத் தாவது வரை படிப்பு, மத்திய அரசு தந்தி இலாகாவில் நிரந்தரமான உத்தி யோகம், சமையல் செய்யத் தெரிந்த குடும்ப பாங்கான பெண் — வேலையில் உள்ள நல்ல குடும்பத்தைச் சேர்ந்த வரன் தேவை. மற்ற உட்பிரிவைச் சேர்ந்தவராயினும், காது கேட்பது, பேசுவது இவைகளில் குறை உள்ளவராகிலும் சம்மதம். முழு விபரங்களுடன் ஜாதகத்துடன் விண்ணப்பிக் கவும். பெட்டி எண் 900

காச்யப கோத்திரம், வடமாள், ஹஸ்தம், 31 வயதுள்ள பி.யூ.சி. படித்த செகண்டரி கிரேட் டீச்சர் வேலை பார்க்கும் நல்ல அழ குள்ள குடும்பப் பாங்கான பெண்ணிற்கு அரசு, தனியார் துறையில் வேலைபார்க்கும் வரன் தேவை. மற்ற பிரிவுகளும் சம்மதம். பெட்டி எண்: 901

நாயுடு. 33 வயது. அரசாங்க உத்தி யோகம் (கிளார்க்) சேலம், மாத வரு மானம் ரூ. 600/- ஏற்கெனவே திருமணமாகி ஒரு குழந்தை, மனைவி இறந்து விட்டதால் மறுமணம். விருப்பமுள்ள நாயுடு, பெண்கள் மற்றும் இளம் விதவைகள் விண்ணப்பிக்க வும். பெட்டி எண்: 902

ஆத்ரேய கோத்திரம் பூரம் ஐயர் பெண். உயரம் 5' 3'' சிவப்பு நிறம், குன்னூர் காலேஜில் லெக்சரர். எம்.எஸ்ஸி. வயது 34. இந்தப் பெண்ணிற்கு வயது 38—40—க்குள் அதே வகுப்பைச் சேர்ந்த பையன் தேவை. ஐயர் வகுப்பில் உட்பிரிவுகளும் எடுத்துக் கொள்ளப்படும். ஜாதகம் பார்க்க தேவை இல்லை. கல்யாணம் நன்றாக நடத்திக் கொடுக்கப்படும். பெட்டி எண்: 903

நல்ல எடுப்பான தோற்றம், சிவப்பு நிறம், அரசு நிதி உதவி பெறும் தொழிற் பயிற்சிப் பள்ளிக்கூடத்தில் மேல்நிலை எழுத்த ராகப் பணி செய்யும் நல்ல வசதியுள்ள 33 வயதான பரணி நட்சத்திரம் உடைய சுத்த சைவ வெள்ளாளப் பிள்ளைப் பைய னுக்கு தஞ்சை, திருச்சி மாவட்டங்களைச் சொந்த மாவட்டங்களாகக் கொண்ட சுத்த சைவ பிள்ளை இனத்தில் உத்தியோகம் பார்க்கும் நல்ல அழகுள்ள பெண் தேவை. பெட்டி எண்: 904.

த னி யா ர் நிர்வாகத்தில் இயங்கும் பெண்கள் மேல்நிலைப் பள்ளியில் ஆசிரியை யாக இருக்கும் 36 வயதான சுத்த சைவ வெள்ளாளப் பிள்ளை பெண்ணுக்கு சைவ முதலியார், சைவப்பிள்ளை வகையில் 38, 39 வயதுக்கு மேல் நாற்பது வயதுக்குள் உத்தியோகத்தில் இருக்கும் மணமகன் தேவை. தாரம் இழந்து குழந்தை இல்லாத வர்களும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 905

ஸ்ரீவத்ஸ் கோத்திரம் வடமாள். முன்னாள் மத்திய சர்க்கார் அதிகாரியின் மகள் வயது 28. அனுஷம் செவ்வாய் தோஷம். வீட்டு வசதியுடன் கூடிய மத்திய சர்க்கார் வேலை எம். காம் படிப்பும் நடக்கிறது. தகுதியான பையன்கள் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 906.

பையன் வடமாள். வயது 28. வேலை வங்கியில். மாத வருமானம் ரூ. 800. படிப்பு பி. யூ. சி. உயரம் 5.5 அடி. காச்யப கோத்திரம். இந்த பையனுக்கு சிறு ஊனம் உற்ற பெண் அல்லது குழந்தைகள் இல்லாத இளம் விதவைபெண் அல்லது விவாகரத்து செய்தவர் இருந்தாலும் சம்மதம். வங்கியில் வேலை பார்க்கின்ற பெண் இருந்தாலும் சரி. பெட்டி எண்: 907.

அரசு கல்லூரியில் துணைப் பேராசிரியராக பணியாற்றும் ரூ. 1200/- ஊதியம் பெறும் இருவிழிகளற்ற, 34 வயதான தமிழ் ஜெயின் (ஜைனர்) மணமகனுக்கு, குறைந்தபட்சம் +2 தேறிய, சேவை உணர்வுடைய மணமகள் தேவை. எளிய குடும்பத்துப் பெண்களும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 908.

''ஸ்ரீவத்ஸ கோத்திரம் – வடமாள். திருவாதிரை – எஸ். எஸ். எல். சி.நன்றாக சமையல், தையல், வீட்டு நிர்வாகம் தெரிந்த 26 வயதுடைய காது கேளாத ஊமைப் பெண்ணுக்கு, நல்ல குணம், கருணையுள்ளம் கொண்ட, படித்த, நிரந்தர வருமானம் கொண்ட மணமகன் தேவை. கோவிலில் வைத்துத் திருமணம் நடத்தித் தரப்படும். வரதட்சிணை கொடுக்க வசதியில்லை. இதே மாதிரி குறையுள்ள வேலை பார்க்கும் ஊமை பையனாலும் அல்லது இரண்டாம் தாரமாக இருந்தாலும் பரவாயில்லை. கடைசி வரைக்கும் வைத்துக் காப்பாற்ற வேண்டும். பிராமண ஐயர் பிரிவினர் மட்டும் போட்டோவுடன் விண்ணப்பிக்கவும்.'' பெட்டி எண்: 909.

33 வயது. கௌசிக கோத்திரம். கேரள ஐயர் (வடமாள்) கணவனை இழந்து நல்ல உத்தியோகத்தில் உள்ள பெண்ணுக்கு பரந்த மனமுடைய மணமகன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். மனைவியை இழந்து, குழந்தை உள்ளவர்களும், இல்லாதவர்களும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 910

அய்யங்கார் எம். ஏ. பி. டி. மாதச் சம்பளம் ரூ. 1000- சிவப்பு 5' 3'' உயரம். பாரத்வாஜம். மூலம் 4–ம் பாதம் 32 வயது பெண்ணுக்கு அதே இனத்தில் பி. ஏ., எம். ஏ., படித்த உத்தியோகத்திலிருக்கும் (ஸ்கூல் காலேஜ் உபாத்தியாயர்கள் உள்பட) வரன் தேவை. பெட்டி எண்: 911.

இனிய குணம். அழகு நிறைந்த 34 வயது முடிந்த (முப்பதே மதிக்கப்படும்.) இந்து பிற்பட்ட வகுப்பு, அரசுவேலை, மாதம் ரூ. 850/- திருமணமாகாத பெண்ணுக்கு திருமணமாகாத 40 வயதுக்குட்பட்ட இந்து வரன் தேவை. (ஜாதி பேதமில்லை.) ரொக்க ஆஸ்தியும் எதிர்காலத்தில் பெறுவார். பெட்டி எண்: 912.

30 வயது தமிழ் பிராமண – திருமணமான இரண்டு மாதத்திற்குள் விவாகரத்து பெற்ற – பி. யூ. ஸி. வரை படித்துள்ளபெண்ணுக்கு பரந்த மனப்பான்மை உடைய 36 வயதுக்குட்பட்ட நல்ல உத்தியோகத்தில் உள்ள பிராமண பையன் தேவை. விவாகரத்து பெற்றவர்கள், மனைவியை இழந்தவர்களும் தொடர்பு கொள்ளலாம். பெட்டி எண்: 913.

**திருமண மலர்ப்பகுதியில் விளம்பரம் செய்ய கட்டணம் ரூ. 30/– தொகையை 'மங்கையர் மலர்' என்ற பெயருக்கு போஸ்டல் ஆர்டராக மட்டுமே அனுப்பவேண்டும். ஒரு விளம்பரத்தில் ஒருவருக்கு 30 வார்த்தைகளுக்குள் விவரங்கள் தர வேண்டும். பதில் அனுப்புபவர்கள் ''விளம்பரதாரர், பெட்டி எண்.... c/o மங்கையர் மலர், கிண்டி, சென்னை-600032 என்ற விலாசத்துக்கு அனுப்பவும். தனிப்பட்ட கடிதப் போக்குவரத்து கிடையாது.**

ஸ்ரீவத்ஸ கோத்திரம். கேட்டை 4–ம் பாதம், 35 வயது (வடமாள்) பெங்களூரில் தனியார் நிறுவனத்தில் குமாஸ்தா வேலை பார்க்கும் பையனுக்கு வசதியுள்ள குடும்பத்திலிருந்து வேலைக்குப் போகும் ஐயர் பெண் தேவை. முழு விவரங்களுடனும் ஜாதகத்துடனும் புகைப்படம் அனுப்பவும். பெட்டி எண்: 914

கௌசிக கோத்திரம், வடமாள் புனர்பூசம் வயது 35. உயரம் 5' 3'' எஸ். எஸ். எல். சி., பெண்ணுக்கு நல்ல நிலையில் உள்ள பரந்த மனப்பான்மையுள்ள 38–43 வயதிற்

# பருவ வயதினர் பலரைப் பாதிக்கும் பிரச்னை: பரு...
# அது பற்றிப் பேசுகிறாள் ஒரு புதுமணக் குமரி.

*'பருவ வளர்ச்சி என்றாலே பரு வரும். அதற்கு பரிகாரம் கிளியரெஸில்: பருக்களை கரைத்து கட்டுப்படுத்த உதவுகிறது.'*



''அப்போது எனக்கு வயது 13. எனக்கு பரு வரத் தொடாங்கியது. பரு வரும் போதெல்லாம் பல்லாண்டுகளாய் பாரா முகமாய் இருந்தேன். பின்பு ஒருநாள் என்னைப் பெண் பார்க்க ஒருவர் வந்தார். பருக்களை முகத்திலே பார்த்த உடனேயே என்னை அவர் வேண்டாம் என்றார். என் தோழி ஜெயாவின் ஆலோசனைப்படி நான் கிளியரெஸில் தடவத் துவங்கினேன். தவறாமல் அன்றாடம் இருமுறை தடவி வந்தேன். அப்புறம் ஒரு நாள் என் தோழி ஒருத்தியின் வீட்டில் மறுபடி 'அவரை' சந்தித்தேன். அவர் என்னை வைத்த கண் வாங்காமல் பார்த்தாரே பார்க்கணும். நீங்களும் நாள் தோறும் இருமுறை கிளியரெஸில் உபயோகியுங்கள். பருக்களைக் கட்டுப் படுத்துங்கள்! இப்போது ஜோடி சேர்ந்து வருகிறது கிளியரெஸில்!''

**கிளியரெஸில் வேனிஷிங் மெடிகேஷன் மற்றும் கிளியரெஸில் ஸ்கின் கலர்டு மெடிகேஷன் — ஒப்பற்ற 3-வழிச்செயல் கொண்டவை.**



1. உடைய வைக்கிறது பருக்களை



2. கரைக்கிறது பருக்களை



3. காய வைக்கிறது. பருக்களை




புதிய வேனிஷிங் மெடிகேஷன்

ஸ்கின் கலர்டு மெடிகேஷன்

**கிளியரெஸில்** உலக நம்பர் 1 முகப் பரு மருந்து க்ரீம்

OBM/8025R TAM

குள் மணமகன் தேவை. உட்பிரிவுகள் பரவா யில்லை. ஜாதகத்துடன் விவரம் அனுப்பவும் பெட்டி எண்: 915

தெலுங்கு பிராமணர் — பாரத்வாஜ கோத்திரம். பி. எஸ். ஸி. சௌதியில் பிரபல ரெப்ரிஜிரேஷன் கம்பெனியில் நிரந்தரவேலை. உயரம் 5' 4'' வயது 27 உள்ள பைய னுக்கு படித்த அழகுள்ள குடும்பப்பாங்கான 18 முதல் 23 வயதுக்குள் அதே வகுப்பில் பெண் தேவை. பெட்டி எண்: 916.

காச்யப கோத்திரம், ப்ருஹசரணம், ஹஸ்த நட்சத்திரம், வயது 32. பம்பாயில் பட்டதாரி ஆசிரியை. வருமானம் ரூ. 1000. திறமையும் அழகும் உள்ள குடும்பப் பாங் கானவள். உட்பிரிவுகள் சம்மதம். பம்பா யில் வசிக்கும் பட்டதாரி பையன் உத்தமம். மற்ற இடங்களிலிருந்தும் ஜாதகத்துடன் எழுதவும். பெட்டி எண்: 917

கபி கோத்திரம், பிரஹசரணம், மிருகசீரு ஷம், பி. ஏ. படித்த பம்பாயில் மத்திய அரசில் வேலையில் இருக்கும் 30 வயது பெண்ணுக்கு, பம்பாயிலோ, சென்னையிலோ நல்ல உத்தியோகத்தில் இருக்கும் படித்த மணமகன் தேவை. ஜாதகத்துடன் விண் ணப்பிக்கவும். மனப் பொருத்தத்திற்கும் தயார். பெட்டி எண்: 918

ஆரிய வைசிய (கோமுட்டி செட்டியார்) வகுப்பைச் சேர்ந்த 29 வயது, 5 அடி 8 அங்குல உயரம், எடுப்பான தோற்றம் கொண்ட சொந்தத் தொழில் செய்து மாத வருமானம் ரூ. 3000/-க்கு மேல் சம்பாதிக் கும் மணமகனுக்கு அதே வகுப்பைச்சேர்ந்த அழகும், எடுப்பான தோற்றமும் பண்பும் உடைய மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 919

மார்வாரி பிராம்மணர் வாத்ஸ் கோத் திரம். Mines Manager மாதம் ரூ. 1400-க்கு மேல் சம்பாதிக்கும் 36 வயதுள்ள மனைவியை இழந்தவருக்கு,பிராமண ஜாதியில் கணவனை இழந்தவரோ அல்லது விவாகரத்து செய் துள்ள குழந்தைகள் இல்லாத பெண் தேவை. வரதட்சணை தேவை இல்லை. பெட்டி எண்: 920

பி. எஸ்ஸி படித்து மாதம் ரூ. 1,150 சம்பளம் வாங்கும் 31 வயது லீகல் அட் வைசர் தெலுங்கு முலகநாடு பிராமண பைய னுக்கு நிரந்தர வேலையில் இருக்கும் மண மகள் தேவை. எல்லா தெலுங்கு பிராமண பிரிவுகளும் சம்மதம். பெட்டி எண்: 921

பாரத்வாஜ கோத்திரம். பிரஹசரணம் வயது 30 நிரம்பிய தனியார் கம்பெனியில் உத்தியோகம் பார்க்கும் பட்டதாரி பெண் ணிற்கு நல்ல வேலையில் நிரந்தரமாக பணி புரியும் மணமகன் தேவை. ஜாதகம் இல்லை. மனப்பொருத்தம். பெட்டி எண்: 922

"Correpondence invited for a Bank employee, 30 years old, Iyer Boy, from Parents of eduated, good looking girls. employment no bar.'' 923

இந்து பிற்பட்ட வகுப்பு (சைவம்) அழகு. குணம் நிறைந்த குடும்பப்பாங்கான 31 வயது முடிந்த (இருபத்தெட்டே மதிக்கத் தக்க) பட்டதாரி சென்னையில் அரசுப்பணி யில் ரூ. 900/- சில ஆண்டுகள் கழித்து ரொக்க ஆஸ்திக்கு உடமை பெறும் திருமண மாகாத பெண்ணுக்கு திருமணமாகாத தகுதியான வரன் தேவை. இந்து எந்த சாதியும் சம்மதம். பெட்டி எண்: 924

மணமகன்கௌண்டின்யகோத்திரம்,பிரஹ சரணம், கார்த்திகை நக்ஷத்திரம், பி.காம், திருச்சிராப்பள்ளியில் மத்திய சர்க்காரில் உத்தியோகம், 1100/- சம்பளம், 37 வயது, ஆனால் இளமையான தோற்றமும் அழகும் உள்ளவர். இவருக்கு நல்ல குடும்பத்தைச் சேர்ந்த, அழகும், பண்பும் உள்ள பெண் தேவை. உட்பிரிவுகள் பரவாயில்லை. ஜாதகம் குடும்ப விவரங்களுடன் எழுதவும். உத்தி யோகத்தில் உள்ளவர்களும் விண்ணப்பிக்க லாம். பெட்டி எண்: 925

ஸ்ரீவத்ஸ கோத்திரம். வடமாள். உத்தி ராடம் 23 வயது பி. யூ. ஸி., டைப், ஷார்ட் ஹாண்ட் பாஸ்செய்து தனியார் கம்பெனியில் ரூ. 400/- மாத சம்பளம் வாங்கும் 5' 3'' உள்ளபெண்ணுக்கு வரன்தேவை.பிரஹசரண மாயிருந்தாலும் ஏற்றுக் கொள்ளப்படும். ஜாதகம், குடும்ப விவரங்களுடன் எழுதவும். பெட்டி எண்: 926

வடகலைஐயங்கார்,கௌண்டின்யகோத்திரம் உத்திராட நட்சத்திரம். 28 வயதான ஆங்கில இலக்கியத்தில் எம். ஏ. பயின்று அரசு பள்ளியில் ஆசிரியராக பணியாற்றும் (மாத சம்பளம் ரூ. 650) பார்வையற்ற இளைஞருக்கு ஐயங்கார் வகுப்பில் தமிழும் ஓரளவு ஆங்கில மும் படிக்கத் தெரிந்த பரந்த மனப்பான்மை யுள்ள மணமகள் தேவை.
பெட்டி எண்: 927

வடமாள் ஐயர், 32 வயது கௌசிக கோத் திரம். ஸங்கீதம் தெரிந்த குடும்பப்பாங்கான பெண்ணுக்கு நடுத்தர குடும்பத்திலுள்ள 40 வயதுக்குட்பட்ட வேலையில் உள்ள பையன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். இரண்டாம் தாரம் பரவாயில்லை. ஜாதகம் கிடையாது. பெட்டி எண்: 928.

வடமாள் ஐயர், வயது 36, பாரத்வாஜ கோத்திரம் திருவோண நட்சத்திரம் சொகண்

டரிலிரேடு ஆசிரியராக காரைக்குடிக்கு அருகில் பணிபுரிபவருக்கு அழகுள்ள, தெய்வ பக்தி கொண்ட வேலையில் உள்ள பெண் தேவை. ஜாதகம் மற்றும் புகைப்படத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 929

யாதவ குலத்தில் (தமிழ்) 23 வயது பட்டதாரி பெண்ணுக்கு மணமகன் தேவை. எந்த உட்பிரிவானாலும் பரவாயில்லை. மணமகன் பற்றியும் அவரது குடும்பம் பற்றிய விபரங்களுடனும் ஜாதகம் போட்டோவுடனும் எழுதுக. பெட்டி எண்: 930

எதிர்பாராத காரணங்களால் திருமணமாகி இரண்டு மாதங்களில் பிரிக்கப்பட்டு, பின் விவாகரத்து பெற்ற நல்ல குடும்பத்தைச் சேர்ந்த, நன்கு வீட்டு வேலை தெரிந்த, அரசாங்கத்தில் வேலை பார்க்கும் 27 வயது பிராமணப் பெண்ணுக்கு 35 வயதுக்குள், பரந்த மனப்போக்குடைய நல்லநிலையில் இருக்கும் பிராமணப் பையன் தேவை. மனைவியை இழந்து குழந்தை இல்லாதவர்களும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 931

கௌண்டின்ய கோத்திரம், வடமாள், புனர்வசு, பி. எச். டி. பேராசிரியர், வயது 45. ரூ. 2700 மாத சம்பளம் 5' 8'' மாநிறம். நன்னடத்தை நற்குணம் உள்ள அறிவாளிக்கு அழகு,குணம்,உள்ள லேடி டாக்டர், அல்லது மெத்த படித்த அதே இனத்தைச் சேர்ந்த (35—39) பெண்மணி, சென்னையிலேயே இருப்பவர் அல்லது மாற்றிக்கொள்ளக் கூடியவர் தேவை. பெட்டி எண்: 932

கேட்டை, சாலங்காயன கோத்திரம். டாக்டரேட் பேராசிரியை வேலை பார்க்கும் ஐயர், பிரஹசரணம் அழகிய 39 வயதுள்ள பெண்ணுக்கு அதற்கேற்ற உயர்ந்த வேலையிலுள்ள 45 வயதுக்குள் பிராமண மணமகன் தேவை. தமிழ் ஐயரில் உட்பிரிவுகளும் சம்மதம். பெட்டி எண்: 933.

பார்க்கவகுல நத்தமன் உடையார் 26 வயது. பி. ஏ. முடித்து சொந்த விவசாயம் கவனிக்கும் நல்ல வேலைக்கும் முயற்சி செய்யும் மணமகனுக்கு அழகிய ஓரளவு படித்த குடும்பப் பொறுப்பு நிறைந்த பொருத்தமான மணமகள் தேவை. போட்டோ, ஜாதகம் மற்றும் முழு விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் 934

தனியார் நிறுவனம் (ஷிப்பிங் ஏஜன்சி) மாதம் ரூ. 450. சம்பாதிக்கும் பி.யூ.சி. 30 வயது குடும்பத் தொந்தரவற்ற வன்னிய குல க்ஷத்திரிய வாலிபருக்கு அதே குலத்தைச் சார்ந்த வேலைக்குச் செல்லும் மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 935.



## மங்கலமான குங்கும ரகசியங்கள்

பெண்களின் மங்கலச் சின்னம் குங்குமம். இந்தக்குங்குமம் வைத்த நெற்றிபெண்களுக்கு அழகைக் கொடுக்கிறது என்றால் மிகையில்லை. இப்பொழுதெல்லாம் எத்தனையோ சுமங்கலிகளின் நெற்றியைப் பார்க்கும்போது 'பகீ'ரென்று ஆகிறது. காரணம் 'கரே'லென்று கருப்பு. பொரிப் பொரியான சிறிய கொப்பளங்கள். அதைச் சுற்றி நீர். நெற்றி ஒரே அசிங்கமாகக் காட்சியளிக்கிறது. பார்ப்பவர்கள் பரிதாபப் படும்படியாக இருக்கிறது. இதற்கெல்லாம் காரணம் கடையில் வாங்கும் மலிவான குங்குமம் செய்யும் பரோபகாரமான செயலேயாகும்.

மைதா மாவில் கலர்ப் பவுடர்களைக் கலப்பதும், படிகாரம் அளவுக்கு மீறிப் போவதும் முக்கிய காரணமாகும். இந்தக் குங்குமத்தை வீட்டிலேயே தயாரிக்கலாமே. நெற்றியும் தப்பித்து முகப் பிரகாசத்தை அதிகரிக்கச் செய்யும்.

நன்றாக முற்றிய பச்சை மஞ்சளை ஒரு பானையில் போட வேண்டும். எலுமிச்சம் ரசத்தைப் பிழிய வேண்டும். அரைக் கிலோ மஞ்சளுக்கு ஆறு எலுமிச்சம் பழம் போதுமானது. சாறு அதிகம் உள்ள பழமானால் நான்கு போதும். கொஞ்சம் வெண்காரத்தைப் போட்டு நன்கு மூடிவைத்துவிட வேண்டும். ஒரு வாரம் கழித்துப் பார்த்தால் மஞ்சள் எல்லாம் வெண்காரம்கலந்த எலுமிச்சம் ரசத்தினால் சிகப்பு நிறம் ஆகும். பிறகு நன்கு இடித்து வஸ்திரகாயம் (மெல்லிய துணியில் சலித்தல்) செய்து வைத்துக் கொள்ளலாம். அர்ச்சனைக்கு உகந்த உயர்ந்த கலப்பில்லாத குங்குமம் இதுதான்.

—ரோஜி

**சே**வல் கூவ முடியாத அந்த நவீன இருப்பிடத்தில், சுவர்க்கடிகாரம் ஆறுதடவை கூவும்போது எழுந்து, எட்டு தடவை கூவுவதற்குள் குளித்துமுடித்து உண்டு உடுத்து, அந்தக் கடிகாரம் அரைகுறையாக கூவியபோது ''பிரீப்கேசை' எடுத்துக் கொண்டு புறப்பட்ட சிவராமன், மனைவியை செல்லமாக அதட்டினான். ''ஆபீசுக்குப் போனதும் முதல்





# தராதரம்

சு. சமுத்திரம்

வேலையா... காந்தி படத்துக்கு 'புக்' பண்ணுவேன். அப்புறம்... குழந்தை ஞாபகம் வருது, கிழவி ஞாபகம் வருது நான் வரலே'ன்னு போன்ல பேசி கழுத்தை அறுக்காதே. சொல்லணுமுன்னா இப்பவே சொல்லிடு.''

மைதிலி, கணவனை சிரித்தபடியே பார்த்தாள். வெயில் கொட்டோ கொட்டு என்று கொட்டும்பொழுது, 'அவர்' கோட்டு கோட்டென்று போட்டு, தன்னைத்தானே பூட்டி, அங்கும் இங்கும் உடம்பை அசைக்க முடியாமல் சிறைப்பட்டிருப்பதைப் பார்த்துச் சிரித்தாள்.

''என்ன சிரிப்பு...!''

''ஒண்ணுமில்லே. இந்த வெயில்லேயும், பாவம் நீங்க சூட் கோட்டோட போகவேண்டிய தலைவிதியை நினைச்சேன்.''



''நான் என்ன உன்னை மாதிரி லொண்டான் லொடுக்கு கவர்ன்மெண்ட் ஆபீஸரா? பிரபல கம்பெனியின் மேனேஜர்! ஏ. ஸி. அறைக்குள்ளே போனதும் எல்லாம் சரியாயிடும். எல்லாம் மறந்துவிடும்.''

''என்னைக் கூடவா?''

''உன்னை நினைச்சால்லே மறக்கறதுக்கு?''

''என்ன சொன்னீங்க.''

''ஐ ஆம் சாரி. ஒரு புக் படிச்சேன். அதுல காதலன், காதலியைப் பார்த்து 'என்னை நினைச்சியா'ன்னு கேட்பான். அதுக்கு அவள் 'உங்களை மறந்தால்தானே நினைக்கறதுக்கு'ன்னு சொல்லுவாள். நான் உல்டா பண்ணிட்டேன்.''

''பரவாயில்லே... நல்லாத்தான் சமாளிக்கிறீங்க...''

''ஸாரி... நம்ம ரமேஷை எங்கே விடப் போறே...''

''எங்கே விடுவேன்... எல்லாம்... என் பிரண்ட் வசந்தா வீட்லதான்.''

''சரி, நான் வரட்டுமா... அப்புறம் ஒன் அக்கவுண்ட்ல எவ்வளவு இருக்கு?''

''ஏன்?''

''அட.... ஒரு பேச்சுக்குக் கேட்கப்படாதா?''

''ரெண்டாயிரம் தேறும்.''

''இவ்வளவுதானா?... ஒன் மைத்துனிக்கு... அவசரமாய் மூவாயிரம் ரூபாய் வேணுமாம். அவள் ஹஸ்பெண்டுக்கு...ஏதோ பிஸினஸ்ல.. ப்ரமமாம்.''

மைதிலி, கணவனையே மௌனமாகப் பார்த்தாள். அவள் நின்ற இடமே, அதல பாதாளமாய் ஆனது போல் அவனைத் தாழ்ந்து பார்த்தாள்...'காந்தி' படத்திற்கு தன்னை அழைத்ததன் மர்மம் அப்போது தான். அவளுக்கு அதிர்ச்சி வடிவில் அடி வயிற்றில் கலவர ரூபத்தில் புரிந்தது. அந்த மர்மம் துலங்கத் துலங்க, அவள் அசைவற்ற உருவமானாள். இந்த மாதிரியான கௌரவத் திருட்டுக்கு காந்தி படம்மேலயா பழியைப் போடுவது? மைதிலி ஒரு நாளும் இல்லாதது போல் சற்று சூடாகவே பதிலளித்தாள்.

''எத்தனை நாளைக்குத்தான் இப்படிக் கொட்டறது? நமக்கும் ஒரு பையன் இருக்கான். அதோட, ஏதோ அவசரமுன்னோ, ஆபத்துன்னோ, வந்தால்!...''

''ஒன்னோட நல்ல குணத்துக்கு அந்த மாதிரி எதுவும் வராது. ஒன் மைத்துனி 'எங்க அண்ணி எனக்குத் தாய் மாதிரி இல்லே: தாயேதான்னு' ஊர் முழுதும் டமாரம் அடிக்கிறாள். அப்புறம் ஒன் இஷ்டம். என்ன பேசாமல் இருக்கே?''

''ஆல் ரைட்... உங்களுக்கு நான் சொன்னாலும் புரியாது...''

''புரியாமலேயே இருக்கட்டும். பணத்த டிரா பண்ணிட்டு வந்துடறியா? பேங்க்லே ஒரு ஆயிரம் ஒ. டி. கேளு. அடுத்த மாசம்

அட்ஜெட்ஸ் பண்ணிக்கலாம். என்னம்மா.. வாய் திறக்க மாட்டங்கறே?''

''சரி, சொல்லிட்டுங்கல்லே.''

''தாங்யூ... மறக்காமல் தியேட்டருக்கு வந்துடு... பணத்தை டிரா பண்ண மறந்துடாதே...''

மைதிலி, கணவனை இளக்காரமாகப் பார்த்தாள். பிறகு அமைதியாக ''ஏங்க. உங்க நேச்சருக்கு காந்தி படம் ஒத்து வராது. ஜேம்ஸ்பாண்ட் டைப்பில ஏதாவது ஒரு படத்துக்கு புக் பண்ணுங்க'' என்றாள்.

சிவராமன் பதிலளிக்கத் தயங்கவில்லை.

> அரிசியை, ரவைக்கு உடைக்கும்போது, 1 கிலோ அரிசிக்கு — தலா 1 கைப்பிடி கடலைப்பருப்பு, துவரம் பருப்பு, பாசிப் பருப்பு இம்மூன்றையும் லேசாக வெறும் வாணலியில் தனித்தனியாக வறுத்துப்போட்டு, இரண்டு வற்றல் மிளகாய், சிறிது சீரகம், பெருங்காயம் இவையும் சேர்த்து, எந்திரத்திலோ, மிஷினிலோ உடைத்து வைத்துக் கொள்ளுங்கள். உப்புமாவின் ருசி அற்புதமாக இருக்கும்.
>
> —எஸ். பட்டம்மா

''காந்தி ஈஸ் எ கிரேட் மேன். இன்னும் பழைய குட்டம்பட்டியாவே இருக்கியே. பார்க்க வேண்டிய படம். ஓ... கே... நான் புறப்படுறேன். தியேட்டருக்கு மறந்துடாதே. காலையிலேயே பணத்தை டிரா பண்ணிடு. சாயங்காலம் பாங்க் கவுண்ட்டர்லே கூட்டம் கூடி, படத்துக்கு வர லேட்டாயிடக் கூடாது பாரு.''

சிவராமன், கவர் டையை இழுத்து விட்டபடி, மாடிப்படிகளில் கீழ் நோக்கித் தாவி, ஸ்கூட்டரை உதைத்தான். ஜன்னல் வழியாக அவன் போவதைப் பார்த்த மைதிலி, சோபா செட்டில் அப்படியேசாய்ந்தாள். அவள் சாய்ந்த வேகத்தில் சோபாவின் கால்கள் தரையில் நகர்ந்து கிரீச் சத்தத்தை எழுப்பின. இதற்குள் சுவர்க்கடிகாரம் ஒன்பது தடவை முழங்கி, அவளுக்கும் ஓர் அலுவலகம் இருப்பதை உணர்த்தியது.

மைதிலி, பீரோவைத் திறந்து, ஏதோ ஒரு புடவையை எடுத்தாள். எந்தப் புடவையை எடுப்பது என்று அவள் தடுமாறும் அளவிற்கு, அவள் கணவன், சிரமம்கொடுத்ததில்லை. இருப்பது நான்கோ, ஐந்தோ தான். மைதிலி, எந்திர மயமாய் ஆடை அணிந்து கொண்டே, மனிதாபிமானத்தின் விலையை மதிப்பிட்டுக் கொண்டிருந்தாள். கணவன் தன்னை ஆசையோடு சினிமாவிற்கு கூப்பிடுகிறார் என்று முதலில் ஆனந்தப்பட்டவள், நாலரை ரூபாய் டிக்கெட்டில், அவன் மூவாயிரம் ரூபாயை மோசடி செய்யப் பார்க்கிறான் என்பதை உணர, உணர அவள் உணர்வற்றுப் போனாள். அலுவலகம் போகவே பிடிக்கவில்லை: ஆனால் எப்படியும் போயே ஆக வேண்டும்! மத்திய பப்ளிக் கமிஷனில், கிளாஸ் ஒன் ஆபீஸராக தேறி, இப்போது இந்தச் சின்ன வயதிலேயே, சென்னை சாஸ்திரி பவனில் அசிஸ்டெண்ட் டைரக்டராக பணியாற்றும் அவளுக்கு அங்கே எவ்வளவோ வேலைகள்!

குடும்பச் சுமையை கழற்றிவிட்டு, அலுவலகச் சுமையை ஏற்றிக் கொண்டவள் போல் அவள் புறப்பட ஆயத்தமானாள். இதற்குள் ஆறு வயது ரமேஷ் 'ம:ம்மி' என்றபடியே படுக்கை அறையில் இருந்து வந்தான். அவனை கட்டிப்பிடித்து சன்னமீர் விடப் போனவள், தான் ஒரு அசிஸ்டெண்ட் டைரக்டர் என்பதை உணர்ந்தவள் போல், மகனின் முகத்தைப் பார்த்தே முக்கால் சோகத்தை தீர்த்துக் கொண்டு, சோகமாக புன்னகைத்தாள். மகனையே மாறி, மாறிப் பார்த்தாள். பப்பாளி பழம் ஒன்று இரண்டு மடங்கு உயரமாகி, அதே நிறத்திலும், விகிதாச்சாரத்திலும், கண், மூக்கு, காதுடன் கைகால்களும் கொண்டது போல் தோன்றிய மகனுக்கு, யூனிபாரம் போட்டு பூட்ஸ்களை மாட்டிவிட்டாள். இதற்குள் அவனை முதல் வகுப்புக்கு அழைத்துச் செல்ல ஒரு சைக்கிள் ரிக்ஷா வந்து மணி அடித்தது. மைதிலி, மகனோடு கீழே இறங்கி ரிக்ஷாக்காரனிடம் அவனை ஒப்படைத்து விட்டு, ''நான் வரதுவரைக்கும் வஸந்தா ஆன்டி வீட்டிலே சமர்த்தாக இருக்கணும் என்ன?'' என்றாள், தான் சமர்த்தில்லாமல் போன இயலாமைக் குரலில்.

ஏழு ஆண்டுகளுக்கு முன்பு திருமணம் ஆகி, மறு ஆண்டே மகன் 'சிஸேரியனாகப்' பிறந்தான். பொதுவாக, இப்படிப் பட்ட அறுவைச் சிகிச்சைக்கு உட்படும் பெண்கள், மீண்டும் ஜாக்கிரதையாக, குழந்தை பெற்றுக் கொள்ளலாம். ஆனால், சிவராமன் 'இனிமேல் உனக்கு குழந்தை பிறந்தால் உடம்புக்கு ஆகாது. ஒண்ணே ஒண்ணு, கண்ணே கண்ணு' என்றான். கரம் பிடித்தவன் தன்னுடைய உடல்நலத்திற்காக ''குழந்தை தியாகம்'' செய்வதாக அப்போது கணவனை நினைத்து ஆனந்தப்பட்டாள். ஆனால், இப்போது தான் புரிந்தது. அவளுக்கு குழந்தைகள் அதிகமானால், அவன் தனது சகோதரிகளுக்கு காரண காரியம் இல்லாமல் அதிகமாக உதவி செய்ய முடியாது

என்னால, அவளை அடிக்கத்தான் முடிஞ்சுது. சாப்பாட்டுக்கே கஷ்டமாயிருக்கையிலே, எப்படிப் படிக்க வைக்கிறது? அதனாலே, ஒன் மாப்பிள்ளைகிட்டே சொல்லி, அவர் வேலை பார்க்கிற கம்பெனியிலே, ஒன் தம்பிக்கு ஒரு கிளார்க் வேலை வாங்கிக் கொடுக்கலாம்னு வந்தேன்.''

நின்று கொண்டிருந்த மைதிலி நெடுஞ்சாண்கிடையாக தாய் மீது விழுந்தாள்.

''அம்மா, எனக்கு வைர நகை போட்டு என்னை அழகு பார்த்த ஒனக்காம்மா சாப்பிடறதுக்கே கஷ்டமாப் போச்சு! எவ்வளவு நாள் பட்டினி கிடந்தால், இப்படிப்பேசுவே. அக்கா கல்யாணத்தை ஆசையோடுபார்த்து



காலையில் தூங்கி எழுந்ததும் நல்லெண்ணெய் 10 சொட்டு கையில் விட்டுக் கொண்டு 10 சொட்டுத் தண்ணீரையும் சேர்த்து இரண்டு கையாலும் சூடு வரும் வரை தேய்த்தால் கையில் வெள்ளையாக சோப்புத் தேய்த்தது போல் இருக்கும். அதை முகத்தில் எல்லா இடங்களிலும் படும்படி நன்றாகத் தடவிக் கொண்டு கொஞ்ச நேரம் கழித்து பயத்தம் மாவு போட்டு அலம்பவும். இப்படி தினசரி செய்து வந்தால் நாளடைவில் முகம் பட்டுப் போல் மென்மையாக ஆகும்.

—தங்கமகாதேவன்.

அக்கா புறப்படும் போது அழுது புரண்ட என் தம்பியை படிக்க வைக்கவாம்மா பணம் இல்லே? நான் பாவிம்மா... சுயநலக் காரிம்மா... நானே அப்பா செத்ததும், குடும்ப நிலைமையை கேட்டுத் தெரிஞ்சிருக்கணும். நானும் தெரிஞ்சுக்கல்லே. நீயும் தெரிவிக்கல்லே. அம்மா, நமக்காம்மா இந்த கதி? ஒனக்காம்மா இந்த கதி?''

அன்னை தன் கண்களைத் துடைத்துவிட்டு, அதே கையால் மகளின் முகம் முழுவதையும் துடைத்து விட்டாள்.

இரவில் வீடு திரும்பிய சிவராமன் கதவைத் திறந்த மைதிலியிடம் எதுவும் பேசாமல் அவளை மேலும் கீழுமாகப்பார்த்தான். வரவேற்பு அறையில் சோபா செட்டையே கட்டிலாக்கி, பேரன் ரமேஷை அணைத்தபடி முடங்கிக் கிடந்த மாமியாரை முகச்சுழிப்போடு பார்த்தான். அந்த அம்மா, அவனைப் பார்த்து எழப்போனாள். அதற்கு வாய்ப்பளிக்காமல், அவன் அங்கே நிற்காமல், படுக்கை அறைக்குள் போய்விட்டான்.

மைதிலி ஆத்திரத்தோடு அவன் பின்னால் போனாள். சூடாகக் கேட்டாள்.

''உங்க அம்மாவ நான் எங்க அம்மாவாய் நினைக்கறவள். நீங்க எங்க அம்மாவை உங்க அம்மாவா கூட நினைக்க வேண்டாம். அவங்களையும் ஒரு மனுஷின்னு நினைச்சி எப்போ வந்தீங்கன்னு ஒரு வார்த்தை கேட்கலாம். ஒரு வார்த்தை கேட்டீங்களா?''

''அதத்தான் நீ போன்லேயே சொல்லிட்டியே. ஸ்பெஷலா வேற கேட்கணுமா?''

''மருமகன், தன் மகனுக்கு ஒரு வேலை வாங்கிக் கொடுப்பார்னு அம்மா நம்பிக்கையோடு வந்திருக்காங்க. எஞ்சினியரிங் காலேஜிலே படித்த தம்பிக்கு படிப்பைத் தொடர முடியாத அளவுக்கு வறுமை. நீங்க வேலை வாங்கிக் கொடுப்பீங்களோ இல்லையோ, இப்போ, கொஞ்சம் அம்மா கிட்டே போய், ஆறுதலா இரண்டு வார்த்தையாவது பேசுங்க... உம்.... போங்க...''

''நான் இப்போ யார்கிட்டேயும் பேச விரும்பல... உங்க அம்மாவுக்கு ஆயிரம் கஷ்டம் இருக்கும். அதுக்கு நாம் என்ன செய்யறது? சுகத்தை அனுபவித்த மாதிரி, கஷ்டத்தையும் அனுவிக்க வேண்டும். அது போகட்டும். பணத்தையாவது டிரா பண்ணினியா? நாளைக்கே தங்கை புருஷனுக்கு டிராப்ட் அனுப்பணுமே?''

மைதிலி, கணவனை நேருக்கு நேராகப் பார்த்தாள். பார்க்கப் பார்க்க அவள் ரசித்த அந்த வட்ட முகத்தில் — அந்த மூக்கின் முனையில் இருந்த கரும்புள்ளி, ஒரு அப்பட்டமான சுயநலத்தின் மையமாகத் தெரிந்தது. இப்படியும் ஒரு மனிதரா? மருமகனுக்கு கேட்டபோதெல்லாம் சீர்செய்தும், கேட்காத போதும் சீர் செய்தும், தான் பெற்ற பிள்ளை போல் பாவித்த மாமியார்படும் இன்னலைக்கூட கேட்கத் தயார் இல்லை என்றால் இவர் கணவரா? இவர் மனிதரா?... இவர் யார்?...

அவளுக்கு, அவன் யார் என்று தெரிந்ததும், தான் யார் என்பதும் புரிந்தது. அவன் அன்னியன் போல் தோன்றியது. ஆகாதவன் போல் தென்பட்டது. அம்மாவுக்கு என்ன செய்யலாம் என்று புரியாமலும் ஏதாவது செய்ய வேண்டும் என்பது புரிந்தும், நாள் முழுவதும் தவித்த அவள் மனதில் சட்டென்று ஒரு உறுதி பிறந்தது. உடனே கனத்த இதயம் கம்பீரமானது. நனைந்த கண்கள் சூடாயின. அது தெரியாமல் சிவராமன் ''நான் சொன்னது காதில விழுந்ததா? இரண்டாயிரம் எடுத்தியா? ஒ. டி. யும் வாங்கினியா?'' என்றான்.

மைதிலி, அழுத்தம் திருத்தமாக பதிலளித்தாள்.

''ஸாரி, பேங்கிலே இருக்கிற இரண்டாயிரத்தையும், அம்மாவுக்கு கொடுக்கப் போறேன். எது கெட்டாலும் என் தம்பியோட இஞ்சினியரிங் படிப்பு கெடக்கூடாது. என் குடும்பம் பட்டினி கிடக்க விடமாட்டேன். என் தங்கை காலேஜுக்கு போகாம இருக்க அனுமதிக்க மாட்டேன்.''

''என்ன உளர்றே!''

''உளறல ஸார்... பிறந்த வீட்டிலே பிறந்து மகளா இருந்து வாங்கியவள், இப்போ தாயாய் மாறிக் கொடுக்கப் போறேன். அவங்க போட்ட நகைகளையெல்லாம் உங்க கிட்டே கழட்டிக் கொடுத்தேன். ஒண்ணு ஞாபகம் வருதா ஸார்? எனக்கு அப்பா தருவதாய் சொல்லியிருந்த மெட்ராஸ் வீட்டை நீங்க உடனே எழுதிக்கேட்டீங்க. மாப்பிள்ளை தன்னுடை வாய்ச்சுத்தத்தை அசுத்தமாய் சந்தேகப்படறதை புரிந்து கொண்ட என் அப்பா, உடனே அதை உங்க பேருக்கு எழுதிக் கொடுத்தார். நீங்க மறுமாசமே அதை எண்பதாயிரத்துக்கு விற்கப் போனீங்க! ராசியான வீடு போயிடக் கூடாதுன்னு, என் அப்பாவே எண்பதாயிரம் கொடுத்து அதை வாங்கிக்கிட்டார். அப்படியும், நான் ஒங்களைப்பற்றி ஏதாவது சொன்னால் அவங்க என்னைத் திட்டுவாங்க... உங்களைப் பற்றி அவங்க ஏதாவது சொன்னா நான் திட்டுவேன்.

ஆனால்.... நீங்க... நீங்க புருஷனா இருக்கலாம்.... ஆனால் மனுசனா இருக்க முடியாது. உங்க சம்பளம் மூவாயிரம் ரூபாயும் என்ன ஆவுதுன்னு இதுவரைக்கும் எனக்குத் தெரியாது. தங்கைக்குப் போவுதோ, வேறு எந்த மங்கைக்குப் போகுதோ எனக்குத் தெரியாது. என் சம்பளத்திலே நீங்க கேட்கிற போதெல்லாம் கொடுக்கிறவள் நான். அப்படிப்பட்ட என்னோட அம்மாவிடம் ''எப்ப வந்தீங்க அத்தே''ன்னு கேட்க மனது வர மாட்டேங்குது. ஒங்களுக்கு இருதயமுன்னு ஏதாவது இருக்குதா?''

''மைதிலி, நீ ஓவராப் பேசறே.''

''ஓவராப் பேசறதோட நிக்கப் போறதில்லே நான். ஓவராயும் போகப் போறேன். ஒரு பெண் பிறந்த வீட்டிலேயிருந்து சொத்து சுகத்தை வாங்கறது தப்பில்லே. ஆனால், பிறந்த வீடு நொடித்தபோது, அந்த வீட்டுக்கு உதவாமல் இருப்பதுதான் தப்பு. சொத்துலே உரிமை கேக்கற மகளுக்கு, கடனை அடைக்கிற கடமையும் உண்டு. எனக்கு இப்ப மனைவி என்கிற கடமையை விட, மகள் என்கிற கடமை அதிகம். நீங்க உண்மையிலேயே ஒரு ஆண்பிள்ளையா இருந்தால், இனிமேல் உங்க சம்பளத்திலேயே இந்த வீட்டை நிர்வகித்துக் காட்டணும். இனிமேல் என் சம்பளத்தை என் அம்மா பேருக்கு அனுப்பப் போறேன்,''

''இந்தா பாரு. நீ, நான் தாலி கட்டின மனைவி. அளவுக்கு மீறிப் பேசினால் அப்புறம் நீதான் வருத்தப்படுவே. உங்க அம்மாவுக்கு நீ சொல்றபடி செய்யுறதாய் இருந்தால், அப்புறம் நானும்நினைக்கிறபடிசெய்யவேண்டி வரும். நாம.... தனித் தனியா....''

இந்தச் சமயத்தில் பாட்டியோடு படுத்திருந்த ரமேஷ் தட்டுத் தடுமாறி உள்ளே வந்தான். தன்னிடம் தாவப் போன மகனிடமிருந்து சிறிது ஒதுங்கியபடியே, மைதிலி ஒரு கேள்வி கேட்டாள்.

''ரமேஷ்! உனக்கு டாடி பிடிக்குமா மம்மி பிடிக்குமா? சொல்லுடா கண்ணு... இதுக்குப் பதில் சொல்ல வேண்டிய கட்டாயம் உனக்கும் வந்திருக்கு. நீ யார் கூட வேணுமின்னாலும் இருக்கலாம். உன் இஷ்டம். யார்கூட இருப்பே... சொல்லு.''

புக்ககம் சென்று வாழப்போகும் பெண்ணிற்கு அன்னை சாரதா சொன்னார்: ''எவருடனும் மிக நெருங்கிப் பழகாதே. குடும்பத்தில் உன் அபிப்பிராயங்களைத் திணிக்காதே. பிறரைப் பற்றி அதிக அளவில் அறிய ஆசைப்படாதே. தினமும் பிரார்த்தனைசெய். எந்த ஆணுடனும், மிகவும் நெருங்கிய பழக்கம் கூடாது. உன்னைச் சுற்றிலும் என்ன நடக்கிறது என்று தெரிந்து கொள். ஆனால் உன் வாயைத் திறக்காதே. கோபத்தை வெளிக்காட்டாதே வார்த்தைகளை சிதற விடாதே.''

எப்பேர்ப்பட்ட புத்திமதி! நாமும் கடைப்பிடிப்போம்.

—லட்சுமிநடராஜன்

''மம்மி கூடத்தான் இருப்பேன். மம்மி தான் பிடிக்கும்.''

''கேட்டீங்களா ஸார். ரமேஷ் தாயோடு தான் இருப்பானாம். இது என் பேர்ல இருக்கிற குவார்ட்டர்ஸ். நான் சொல்றபடி பொருளாதார ஏற்பாட்டிற்கு நீங்க சம்மதிச்சால், நீங்க இங்கே தங்குறதுலே எனக்கு ஆட்சேபனை இல்லே.''

சிவராமன் எறும்பு கடித்தது போல் உடம்பை நெளித்தான். அவள் முகத்தில் படர்ந்த உறுதி அவனுக்குப் புரிந்தது.

சிவராமன், ஆவேசமாக வெளியேறி, கதவை வேகமாக அடித்தபடி புறப்பட்டான். அந்த வேகத்தில் கதவு தானாகப் பூட்டிக் கொண்டது. மைதிலிக்குக் கதவைத் தாழ்ப்பாள் போட வேண்டிய அவசியமில்லாமல் செய்து விட்டான்.

இன்று நான் 200-க்கும் மேற்பட்ட கீர்த்தனைகளை பாடம் செய்திருக்கிறேன் என்றால், அதற்கு அவர்தான் காரணம்." என்று தனது ஆரம்ப காலத்தில் நான் இசை கற்றுக் கொண்ட விதத்தை விவரிக்கிறார் திருமதி ஞானம் சந்தானம்.

"சங்கீதம் கற்றுக் கொள்ளும் காலங்களில் தான் நாங்களும் திரு. சந்தானமும் இல்லறத்தில் இணைந்தீர்களா?" என்று கேட்டால் சிரிக்கிறார்.

"இசையும் இதற்கு ஒரு காரணம் என்று சொல்லலாம். ஆனால் நாங்கள் அன்று உன்னத்தால் ஒன்றுபட்டவர்கள். இரண்டு தரப்பிலும் சில எதிர்ப்புகள் இருக்கத்தான் செய்தன. ஆனாலும் அவரும் மிக உறுதியோடு திருமணம் செய்து கொண்டால் என்னைத் தான் பண்ணிக் கொள்வேன் என்று பிடிவாதமாக நின்றதன் பேரில் 1948-ல் எங்கள் திருமணம் நடந்தது" என்கிறார்.

இவரை மிகவும் பாராட்டி வாழ்த்துவாராம் இவரது மாமனார். "பேஷ் சந்தானம், உன்னை விட உன் பெண்டாட்டிக்கு பெயருக்கு ஏற்றாற் போல் நல்ல ஞானம் இருக்குடா. அவள் மேடையேறி கச்சேரி பண்ண ஆரம்பித்தால் அருமையாயிருக்கும்டா" என்று அடிக்கடி சொல்வதன் மூலம் இவருக்குச் சங்கடத்தை உண்டாக்குவாராம்.

காரணம், தனது பெருமையைவிட, தனது கணவரைக் குறைத்துப் பேசுவதைக் கேட்க மனம் சகிக்காது இந்த இல்லத்தரசிக்கு!

இவ்வளவு தூரம் சங்கீத உலகில் நன் திறமையை வளர்த்துள்ள இவர் ஏன் கச்சேரிகள் செய்ய விரும்பவில்லை என்ற நியாயமான கேள்வி நம் மனத்தில் எழ.... அதற்கு அவர் பதில் தருவது நம்மைத் திகைப்பில் ஆழ்த்துகிறது.

எனது திறமைகள் வளர — வளர அவருடைய திறமைக்கு சற்று வரவேற்பு குறைவாகக் கூடும். மேலும் அவருடைய பெயர் கர்நாடக சங்கீதத்தில் நன்கு பிரபலமாக வேண்டும். அதற்கு நம் சேவையும், நம் சங்கீத ஞானமும் — இவருக்கு மிகத் தேவை என்பதை உணர்ந்தேன். அதனால் அன்றிலிருந்து இன்று வரை அவருடன் தனிமையில் சங்கீதத்தைப் பற்றி விமர்சிப்பேன். மற்றபடி அவர் செல்லும் கச்சேரிகளுக்குக் கூடச் செல்வேன். அந்தக் காலங்களில் அவருக்கு கோபம் அதிகமாகவரும். —ஆனால் இதெல்லாம் அந்தக் காலங்களில் தான். இப்போதெல்லாம் அவர் கச்சேரி செய்யும்போது அதை ரசிக்கத்தான் விரும்புகிறேன். அவருடைய மேதைமையைக்கண்டு மெய்சிலிர்க்கிறேன்" என்கிறார்.

> பால், தயிர், நெய் வைக்கும் பாத்திரங்களில் எறும்பு வருவதை தடுக்க, பாத்திரத்தின் கீழ் கொஞ்சம் விளக்கெண்ணெய் தடவுங்கள். விளக்கெண்ணெ வாசனைக்கு எறும்பு வராது. —எடையூர் சிவமதி

ஆனால் அதிலும் ஒரு முக்கியமான விஷயம். 1946-ல் திருச்சி வானொலியில் இவர் பாடிக் கொண்டிருந்தார். 1978 வரை சென்னை வானொலியில் பாடினார். அதற்குக் காரணம் மாமனார் தானாம். "நீ கச்சேரி தான் செய்ய மாட்டாய் — ரேடியோவிலாவது பாடேன்" என்ற வேண்டுகோளுக்கிணங்க இவர் 1978 வரை பாடியவர் பிறகு வானொலி நிலையத்தினருக்கு "என்னை இனிமேல் பாடக் கூப்பிடாதீர்கள். நான் விலகிக் கொள்கிறேன்" என்று கடிதம் எழுதிப் போட்டு அதிலிருந்தும் ஒதுங்கிக் கொண்டதைக் கேட்கும் போது நம்மால் திகைக்காமல் இருக்க முடியவில்லை.

இவரால் எளிதில் மறக்க முடியாதது, இலங்கையில் மகாராஜபுரம் சந்தானம் இசைக் கல்லூரியில் முதல்வராக நியமிக்கப்பட்டபோது அவருடன் சேர்ந்து செய்த ஓரிரு மேடைக் கச்சேரிகளும், டெல்லியில் இதேபோல் நடத்திய கச்சேரிகளும்தானும்!

காலையில் எழுந்திருந்து அன்றாடக்கடன்களை முடித்து — அம்பாள் பூஜை செய்து அங்கு இரண்டொரு கீர்த்தனைகளைப் பாடுவதோடு சரி — தனியாக பாட நேரம் ஒதுக்க மாட்டார்.

சரி — இவரது மகன்களும் இப்போது கச்சேரி செய்ய ஆரம்பித்திருக்கிறார்களே, இவரது கண்ணோட்டம் அவர்களைப் பொறுத்து எப்படி?

குடும்பம், பரம்பரையாக கர்நாடக சங்கீத மணம் வீசியிருக்க வேண்டும் என்பதே இவர் அவா!

"இவர் தனது தந்தைக்கு இருக்கும் செல்வாக்கை பயன்படுத்திக் கொள்ளாமல் தனது திறமையை வைத்தே வளர்ந்து, இன்று உன்னத நிலைக்கு வந்திருக்கிறார். அது போல மகன்களும் தந்தை — தாத்தாக்களின் பாணியைப் பின்பற்றாமல் தனது திறமையாலேயே — தனி பாணியிலேயே தனியொரு இடத்தைப் பிடிக்க வேண்டும் என்றுதான் அவர்களுக்கும் சொல்கிறேன்" என்கிறார்.

கர்நாடக இசையில் துறவறம் பூண்டுள்ள இவரைப் பற்றி மகாராஜபுரம் சந்தானம் குறிப்பிடுவது "இவளும் என்னைப் போல் கச்சேரி செய்திருந்தால் சங்கீத உலகில் ஓர் புரட்சியாக இருந்திருக்கும். ஆனால் தனது திறமைகளையும் — சேவைகளையும் எனது நலனுக்காகவே அர்ப்பணித்துக் கொண்ட— கொண்டிருக்கும் மனைவி ஞானத்தைப்பெற நான் மிக அதிர்ஷ்டம் செய்திருக்கிறேன்" நெகிழ்ச்சியோடு கூறுகிறார்.

பேட்டி: பவானி வெங்கடராமன்

வண்ணப்படம்: பி.ச. ரமணன்

